

நமோ நமோ லக்ஷ்மீநரஸிம்ஹா (நமோ)
நமோ நமோ ஸுக்ரீவ நரஸிம்ஹா

வரத ஸுலப பக்தவத்ஸல நரஸிம்ஹா
நரம்ருகவேஷ ஸ்ரீநரஸிம்ஹா
பரமபுருஷ ஸர்வ பரிபூர்ண நரஸிம்ஹா
கிரிகுஹாவாஸ ஸுக்ரீவ நரஸிம்ஹா (நமோ)

பயஹர ப்ரஹ்லாத பாலன நரஸிம்ஹா
நயன த்ராயரவிந்த நரஸிம்ஹா
ஜெய ஜெய ஸுரமுனி ஸம்ஸ்துத நரஸிம்ஹா
க்ரியா கலாப ஸுக்ரீவ நரஸிம்ஹா (நமோ)



அதிக்ருபாநிலைய மோஹனரூப நரஸிம்ஹா
நத பிதாமஹமுக்ய நரஸிம்ஹா
ஸதத ஸ்ரீவேங்கடேஸ்வர திவ்ய நரஸிம்ஹா
கிதவாரி பஞ்ஜன ஸுக்ரீவ நரஸிம்ஹா (நமோ)

லக்ஷ்மி நரசிம்மனே உனக்கு நமஸ்காரம், அழகிய கழுத்தைக் கொண்ட நரசிம்மனே உனக்கு நமஸ்காரம்.

அபயம் அளித்து, பக்தர்களின்பால் அன்பு கொண்ட நரசிம்மா, மனிதனும் மிருகமும் கலந்து அதிசய உருவம் கொண்ட நரசிம்மா, பரம்பொருளே, பரிபூர்ணமானவனே! குகையில் வாழும் அழகிய பிடரியை உடைய சீரிய சிங்கப்பிரானே.

பிரஹ்லாதனின் பயத்தைப் போக்கியவனே, அழகிய முன்று கண்களை உடையவனே தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் அபயம் அளிப்பவனே! வேண்டுவதற்றை அருளும் நரசிம்மனே!

அருள் தந்து அழகுடன் விளங்கும் நரசிம்மா, தாயும் தந்தையுமாக இருப்பவனே! வேங்கடவன் உருவில் அருள் தந்திடும் நரசிம்மா, அபயம் அளித்திடும் நரசிம்மா.

*(அன்னமய்ய சங்கீர்த்தனம்)*

*(இப்பாடலின் பண்ணமைப்பு 48-ம் பக்கத்தில் பார்க்கவும்)*



# ஸப்தகிரி


மே - 1991

தனிப்பிரதி ரூ. 1 — மலர் 21

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 12


## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீ ஆதிசங்கரர்: சித்திரம்: கே. ஜெகதீஷ்

பின்னட்டையில : திருமலை படிவிழா நிகழ்ச்சிகள்

2-வது பக்கம் : திவ்ய பிரபந்த விளம்பரத்துறை துவக்க விழா காட்சிகள்

3-வது பக்கம் : ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில்-நாராயணவரம்.


சிறப்பாசிரியர் .
திரு. எம். வி. எஸ். பிரஸாத், I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன்...

ஒவ்வொரு மனிதனையும் ஒரு நடமாடும் கோயிலாகத்தான் திருமூலர் கூறிப்போந்தார். கோயில் எனும்போது அங்கு பிரச்னைகளோ, குற்றங்குறைகளோ இருந்திடாது அமைதி வழங்கும் ஒரு புனிதத் தலமாகத்தான் அது கருதப்படுகிறது. அத்தகுப் பல கோயில்கள்தாம் ஒவ்வொரு வீட்டிலும் நடமாடுகின்றன. வீட்டைச் சுற்றிலும் விளங்கிடும் புறச்சூழ்நிலை பிரச்னைகளாலும், கவலைகளாலும் மாசுபடும்போது, அவன் அவற்றிலிருந்து தப்பித்துக் கொள்ள அவனுக்குக் கிடைத்திடும் ஒரே பாதுகாப்பாக அவன் வீடு விளங்குகிறது. ஆனால் ஒரு காலக்கட்டத்தில் புறச்சூழ்நிலைகளின் தாக்குதலால், வீட்டின் உட்சூழ்நிலையும் கெடும் போது தியாகம், அன்பு, அமைதி, பொறுமை ஆகிய பண்புகளுக்குப் பொருள் இல்லாது அமையும் போது, பிரச்னைகளையும் துன்பங்களையும் எதிர்கொள்ளும்போது, ஊரில் உள்ள பெரிய வீடான 'கோயில்' ஒன்றுதான் ஒருவனுக்கு இறுதிப் புகலிடமாக இருக்கின்றது. பிரச்னைகளூடே, அமைதியின் பின்னணியில் இறைச் சிந்தனையை வீட்டில் பெறமுடியாத போது, அவன் அப்பிரச்னைகளை வீட்டில் விட்டுவிட்டு, விடிவுக்காக கடவுட் உணர்வு என்னும் ஒருணர்வுடன், பலரும் கூடும் கூட்டத்தின் நடுவில், 'நம் போன்றோர் பலர்' எனும் மனச்சமாதானத்துடன், அவன் காப்பாற்றுவான் எனும் நம்பிக்கையுடன் இறைவனிடம் முறையிடும் ஒரே இடமாகக் கோயில்கள் விளங்குகின்றன. பலரும் சேர்ந்து பங்கேற்கும் வகையில் பெரிய அளவில் கோயில்களில் நடைபெறும் சமயத்திருவிழாக்களின் போது அவன் தன்னையே மறந்திடும்போது, அவனுடைய பிரச்னைகளைப் பற்றிக் கூறவா வேண் டும்?

ஆனால் அத்தகுக் கோயில்களே பிரச்னைகளுக்குள்ளாகிடும் போது, மனிதனுக்கு வேறு புகலிடம் ஏது? உத்தமன் உறையும் ஆலயங்களுக்குமா பிரச்சனைகள் எனும்போது வியப்பும், ஐயமும் ஒவ்வொருவர் உள்ளத்திலும் தோன்றிடலாம். ஏன் இல்லை என்பதற்கு ஓர் உதாரணமாய், கலியுகக்கடவுளான வினைதீர்க்கும் வேங்கடவன் கோயில் கொண்டிருக்கும் திருமலைக் கோயில் விளங்குகிறது. என்ன! நாளும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் வந்து கூடும் ஏழுமலையான் கோயிலுக்கா பிரச்சனை என்று கேட்பவர் அதிசயிக்கலாம். ஆனால் அக்கூட்டமே அக்கோயிலுக்கு ஓர் பிரச்சனை என்பதை அறிய நேர்ந்தால் வியப்பு மேலும் விரியும்.

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு வரை, நினைத்த போது திருமலைப் பிரயா ணத்தை மேற்கொள்ளவும், இறைவன் முன் ஒவ்வொரு பக்தரும் ஓரிரு நிமிடங்கள் நிற்கவும், மூலஸ்தானத்தை விட்டு வெளிவரும் போது ஒவ்வொரு பக்தரின் இரு கைகளிலும் வழிய வழிய பிரஸாதமும், வாங்கும் வசதி மற்றும் தேவைக்கேற்ப பைநிறைய லட்டு, வடை பிரஸாதமும் விளங்கும்படியான அன்றைய சூழ்நிலை மறைந்து, இன்று திருமலைக்குச் செல்வது என்பது ஏதோ வெளிநாடு செல்வது போன்ற முன்னேற்பாடு திட்டங்களை மேற்கொள்ள வேண்டிய நிலையில் உள்ளோம். திருப்பதி நகர எல்லைக்குள் காலடி எடுத்து வைத்தது முதல் 'வாழ்வே க்யூ மயமோ' எனும் தத்துவ மனப்பாங்கு மனத்தினுள் மலர, பேருந்துக்கும், உண்டிக்கும், தலைமுடி காணிக்கைக்கும், தரிசனத்திற்கும், 'அந்நெடியோனைக் காணவேண்டும்' எனும் பேரவா உந்த, கால்கடுக்க 'க்யூ'வில் நின்று, 'தள்ளப்படுகிறோமோ, தள்ளுகிறோமா' என்னும் சந்தேகத்தை மனதிற் தேக்கிக் கொண்டு மூலஸ்தானத்தை நெருங் குகின்றோம். அங்கு, அடியார் பலர் புகழ்ந்தேத்திய அம்மலர் மங்கை மணாளனை ஒரு சில வினாடிகளே காணவும், குறைதீர்க்கும் அக்கோவிந்தனின் முன்நின்று நம்முடைய ஒரு சில கவலைகளையும்கூட முறையிடமுடியாத ஒரு நிலையுமே அங்கு நிலவுகிறது. 'க்யூ'

(47-ம் பக்கம் பார்க்க)

# செய்திச் சுருக்கம்

**கோயில் வருமானம் :**

தமிழ் வருடப் பிறப்பு நாளான 14-4-91 அன்று திருமலைக் கோயிலின் வருமானம் உண்டி மூலமாக ரூ. 11-30 இலட்சமும், ஆர்ஜித சேவைகளின் மூலமாக ரூ. 5.18 இலட்சமும், லட்டு, பிரஸாத விற்பனை மூலமாக ரூ. 5.20 இலட்சமும் ஆக மொத்தம் ரூ. 21.69 இலட்சமாகும்.

ஃ ஃ ஃ

**அபிதேயக அபிஷேகம் :**

திருமலைக் கோயிலில் உத்ஸவ மூர்த்தியான ஸ்ரீ மலையப்ப சுவாமி மற்றும் அவருடைய துணைப் பெண் தெய்வங்களின் அபிதேயக அபிஷேகம் எனும் சிறப்பு சமய நிகழ்ச்சி 23-6-91 முதல் மூன்று நாட்களுக்கு நடைபெறும். வஜ்ர கவச சமர்ப்பணை மற்றும் வஜ்ராங்கி உத்ஸவம் 23-6-91 அன்றும், முத்தங்கி சமர்ப்பணை மற்றும் முத்தங்கி உத்ஸவம் 24-6-91 அன்றும், அபிதேயகா சமர்ப்பணை மற்றும் உத்ஸவம் 25-6-91 அன்றும் நடைபெறும்.

ஃ ஃ ஃ

தி. தி. தேவஸ்தானத்தின் 1991-92 ஆம் ஆண்டுக்கான வரவு-செலவுத் திட்டத்தின்கீழ் ரூ. 111 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ ஃ

திருமலையில் சுமார் 15,000 யாத்திரிகர்கள் தங்குவதற்காக நவீன குடில்கள், ஓய்வுக் கூடங்கள் ஆகியவற்றைக் கட்டிடும் வகையில் ரூ. 17.5 கோடி செலவில் திட்டம் ஒன்று மூன்றாண்டுகளுக்குள் நிறைவேற்றப் படும்.

ஃ ஃ ஃ ஃ

தி. தி. தேவஸ்தானத்தாரின்கீழ் செயற்படும் தர்ம பிரசார பரிஷத் ஆதரவில் மேலும் இந்து சமய நிகழ்ச்சிகளை நடத்திடும் வகையில் திட்டம் ஒன்று ரூ. 1 கோடி செலவில் மேற்கொள்ளப்படும்.

ஃ ஃ ஃ ஃ

காஞ்சி காமகோடி பீடத்தைச் சார்ந்த ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் 4-4-91 அன்று திருப்பதிக்கும், திருமலைக்கு வருகை புரிந்தார். திருப்பதியில், நகர எல்லையில் உள்ளூர் பொது மக்கள் சுவாமிகளை எதிர் கொண்டு, வாழ்த்துக்களைப் பெற்றனர். திருமலையில் தகுந்த கோயில் மரியாதைகள் சுவாமிகளுக்கு வழங்கப்பட, தி. தி. தே. உயர் அலுவலர்கள் சுவாமிகளை எதிர்கொண்டனர்.

ஃ ஃ ஃ

**விசேஷ பூஜை :**

திருமலைக் கோயிலில் உத்ஸவருக்கு நடத்தப்படும் வகையில் 'சிறப்புப் பூஜை' எனும் புதிய ஆர்ஜித சேவை ஒன்று 8-4-91 அன்று மேற்கொள்ளப்பட்டது.அன்றுகாலை நடைபெற்ற இப்பூஜையில் ஐந்து குடும்பத்தினர் பங்கேற்றனர். ஒவ்வொரு திங்கட்கிழமைதோறும் நடைபெறும் இச்'சிறப்புப் பூஜை'யில் பங்கேற்க கிருஹஸ்தர்கள் ரூ. 3000/- கட்டணம் செலுத்துதல் வேண்டும். கிருஹஸ்தரைச் சார்ந்த 5 நபர்கள் இப்பூஜைக்கு அனுமதிக்கப்படுவர்.

ஃ ஃ ஃ

முன்னாள் இந்திய இராணுவத் தளபதியும், சிக்கிம் மாநில ஆளுநருமான ஜெனரல் கே. வி. கிருஷ்ண ராவ் அவர்கள் 1-4-91 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார்.

ஃ ஃ ஃ

திருமலையில் உணவு கட்டிட வளாகத்தில் தி. தி. தேவஸ்தானத்தாரின் இலவச ஆயுர்வேத மருத்துவமனை ஒன்று 17-4-91 அன்று ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. பி. பத்மநாபன் அவர்கள் துவக்கி வைத்தார். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட துவக்க நாள் விழாவில் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம். வி. எஸ். பிரஸாத், இணைச் செயலாட்சித் தலைவர் திரு. டி. ஜனார்தன நாயுடு, ஆயுர் வேதத்தில் தேர்ந்த மருத்துவரான திரு. பால்ராஜ் மகரிஷி, திருப்பதியிலுள்ள தி. தி. தே. ஆயுர்வேத கல்லூரியின் முதல்வர் டாக்டர். தீக்ஷித் ஆகியோரும் பங்கேற்றனர்.

ஃ ஃ ஃ

உத்திர பிரதேச ரிஷிகேஷ் ஆர்ஷ வித்யா பீடத்தைச் சார்ந்த ஸ்ரீ தயானந்த சரஸ்வதி சுவாமிகள் 28-4-91 அன்று திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தார்.

ஃ ஃ ஃ

**படிவிழா :**

திருமலை திருப்பதி 22-ஆம் ஆண்டு படிவிழா நிகழ்ச்சிகள் திருப்பதியிலும், திருமலையிலும் 15-4-91 மற்றும் 16-4-91 தேதிகளில் மிகச் சிறப்

(47-ம் பக்கம் பார்க்க)



# ஆதி சங்கரர் 

திரு. எஸ். நடராஜன்,
சென்னை.

ச்ருதி ஸ்மிருதி புராணானாம் ஆலயம்
கருணாலயம்
நமாமி பகவத்பாத சங்கரம் லோக
சங்கரம்

வேத தர்மங்களையும் வைதிக மதத்தையும் அழியாமல் காத்து தந்த மாபெரும் ஆச்சார்யர் ஆதிசங்கரர்.

'பிரும்மம் ஒன்றே சத்தியம், அதைத் தவிர இரண்டாவது வஸ்து இல்லை' என்ற உன்னத அத்வைத தத்துவத்தை உலகிற்களித்த ஞானாசிரின். பல்வேறு தெய்வ வழிபாட்டுக்கு வழிவகுத்து பக்தி நெறி வளர வழி செய்திருக்கிறார்.

**'சிக்குடையார்' யார்?**

ஆதிசங்கரருக்கு 'சிக்குடையார்' என்று ஒரு பெயர் உண்டு. ஏன் இந்த பெயர்? காஞ்சி காமகோடிப் பெரியவர்கள் இதற்குத் தரும் விளக்கம்.

'ஸ்வம்' என்றால் உடையவர் என்று அர்த்தம். உடைமைக்கு சொந்தக்காரர் சுவாமி. குருவும் சுவாமியும் ஒன்று என்பதால்தான், வைஷ்ணவர்கள் ஸ்ரீ ராமானுஜரை 'உடையவர்' என்கிறார்கள். ஆதிசங்கரருக்கு 'சிக்கு உடையார்' என்ற ஒரு பெயர் உண்டு. கன்னடத்தில் 'சிக்க' என்றால் சிறிது என்று அர்த்தம். 'சிறிய' உடையார் என்றால் பெரிய உடையார் ஒருவர் இருக்க வேண்டுமல்லவா? அவர்தான் தொட்ட (பெரிய) உடையார் என்று சாஸனங்களில் குறிப்பிடப்படும் ஏகாம்பரநாதர்.

**பரமேஸ்வரனின் அவதாரம் :**

ஆதிசங்கரர் தக்ஷிணாமூர்த்தியான பரமேஸ்வரனின் அவதாரம்.

"கலி பிறந்த 2000 ஆண்டுகளுக்குப் பின் என்னுடைய அம்சமாக சங்கரர், என்ற பெயருடன் கேரளத்தில் காலடியில் அவதரிப்பார்' என்று சிவ ரகசியத்தில் சிவபெருமானால் கூறப்பட்டபடி 2500 ஆண்டுகளுக்கு முன்சங்கரர், காலடியில் அவதரித்தார்.

ஆசார்யருடைய சரித்திரத்தைச் சொல்லும் நூல்களில் சிவ ரகஸ்யம் ஒன்றுதான் அவர் காலத்தைச் சொல்கிறது. அதில் கலி 2000-க்கு மேல் என்று எழுதப்பட்டுள்ளது. அதாவது ஏசு கிறிஸ்து அவதரித்தற்கு முந்திய காலம்.

ஆதிசங்கரருடன் வாழ்ந்த அவரது சிஷ்யர்கள் ஆசார்யரை பரமேஸ்வரனின் அவதாரம் என்றே சொல்லியிருக்கிறார்கள். தோடகர் தன் தோடகாஷ்டத்தில் ஆசார்யரே பகவான் என்று கூறியிருக்கிறார். பரமேஸ்வரனைச் சேர்ந்த புங்கவ என்ற பதங்களும் அதில் உபயோகிக்கப் பட்டுள்ளன.

மற்றொரு சிஷ்யர் பத்ம பாதர், அவரை 'அபூர்வ சங்கரம்' என்று

வருணிக்கிறார். 'பஞ்ச பாதிகா' என்று அவர் இயற்றிய நூலின் முதல் அடியே 'அபூர்வ சங்கரம்' என்று ஆரம்பமாகிறது.

ஆதிசங்கரர் சிவகுரு ஆர்யாம்பா என்ற தம்பதிகளுக்கு பரமேஸ்வரன் அருளாலே பிறந்தவர். ஈஸ்வராம்ச மான குழந்தையாதலால் பிறக்கும் போதே தேஜஸுடன் விளங்கிற்று.

மூன்று வயதிற்குள் எல்லா பாஷா ஞானமும் தாமாகவே அமைய ஐந்து வயதிற்குள் சாஸ்திரங்களை எல்லாம் கற்றார். தந்தை காலமாகி விடவே குழந்தைக்குத் தாயும்தந்தையாகவும் இருந்து ஆர்யாம்பாளே கவனித்து வந்தாள். உரிய காலத்தில் உறவினரின் உதவியைக் கொண்டு உபநயனம் செய்வித்து முறைப்படி வேதாப்பியாஸம் செய்து வரவும் அனுப்பி வைத்தாள்.

**தாயிடம் அன்பு :**

அன்னையிடம் சங்கரர் கொண்டிருந்த அன்பு பற்றி அறிய பல சந்தர்ப்பங்கள் உள்ளன. அவளையே தெய்வமாக பாவித்து அவள் ஆணையை மீறாதிருந்திருக்கிறார்.

ஒரு சமயம் நோய் வாய்ப்பட்டிருந்து தூரத்திலுள்ள நதிக்கு அவளால் போக முடியாதிருக்கவே சங்கரர் அந்நதியை தன் வீட்டு வாசலுக்கே வரவழைத்து விட்டார்.

ஆசார்யர் சந்நியாஸம் மேற்கொண்ட சமயம் அன்னை மனம் நொந்து "இதற்காகவா உன்னைப் பெற்றேன்!" என்று வருந்தினாள்.

ஆசார்யரும், 'என்னைத் தவிர உனக்கு வேறு புத்திரர் இல்லாததால் உன் அந்திய காலத்தில் நானே வந்து கிருத்தியங்களை செய்கிறேன்' என்று வாக்கு கொடுக்கிறார். அதற்கிணங்க அவர் சரியான சமயத்தில் வந்து விடுகிறார். மாதாவுக்கு கிருத்தியங்கள் செய்ய ஊர் மக்களை உதவிக்கழைத்தபோது 'சன்னியாசிக்கு ஏது மாத்ரு கர்ம உரிமை?' என்று கூறி அவர்கள் உதவிக்கு வராமல் இருந்ததையும் லட்சியம் செய்யாமல் தாயின் கர்மாவைத் தாமே செய்து முடித்தார்.

**நெல்லிக்கனி பிக்ஷை:**

குருகுல வாசம் செய்துகொண்டிருந்தபோது சங்கரர் பிரும்மசர்ய ஆசிரம தர்மப்படி பிக்ஷை வாங்கி வருவது வழக்கம். ஒரு நாள் பரம ஏழையான ஓர் அந்தணர் வீட்டு வாசலில் நின்று 'பவதி பிக்ஷாம் தேஹி' என்றார். அந்த வீட்டு அம்மாள் பிக்ஷை போட ஒன்றும் கிடைக்காமல் தன் வீட்டில் இருந்த ஒரே ஒரு நெல்லிக்கனியை பிக்ஷா பாத்திரத்தில் போட்டாள். சங்கரர் அந்த மாது சிரோன்மணியின் அன்புள்ளத்தைக் கண்டு கருணை கொண்டார். அவர் மனம் இளகியது. அந்த கிருஹத்திலுள்ள வறுமையைப் போக்க மகாலக்ஷ்மியைக் குறித்து (கனகதாரா ஸ்தோத்திரம்) பிரார்த்தித்தார். அவள் வீட்டில் தங்க நெல்லிக்கனியாகவே மழை பெய்வித்தாள் லக்ஷ்மிதேவி.

**துறவு பூணல் :**

தன் அருமை மகனுக்கு மணம் செய்வித்துக் காண ஆசை கொண்டிருந்த தாயாரிடம் சந்நியாசம் ஏற்க அனுமதி பெற சங்கரர் ஒரு சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொண்டார். ஸ்நானம் செய்ய அவர் நதியில் இறங்கியதும் ஒரு முதலை அவர் காலைக் கவ்வியது. பதறிய தாயாரிடம் சந்நியாசம் மேற்கொண்டால் மறு பிறப்பு மாதிரி என்றும் சங்கரர் கூறினார். அம்மாது சிரோன்மணியும் எப்படியாவது தன் மகன் பிழைத்தால் போதும் என்று அதற்கு அனுமதி கொடுத்தார். நதியின் நடுவில் இருந்தபடியே துரீயாஸ்ரமத்தை கிரகித்தார் சங்கரர்.

பின் தக்க குருவை நாடி நர்மதா தீரம் சென்றார். ஸ்ரீ கோவிந்த பகவத் பாதர் இவர் சென்ற சமயம் நிஷ்டையில் இருந்தார். நர்மதை நதிப் பெருக்கெடுத்து கிராமங்களை மூழ்கடித்துக் கொண்டிருந்தது. சங்கரர் தன் கமண்டலத்தில் நர்மதையின் நீரை பிடித்ததும் வெள்ளம் அடங்கியது. நிஷ்டை கலைந்த கோவிந்த பகவத் பாதர் சங்கரரைக் கண்டு அவர் மகிமையை உணர்ந்தார்.

கோவிந்த பகவத் பாதாசாரியாரிடம் சென்று துதித்து நின்றார் சங்கரர். அவர் சமாதி கலைந்து "நீ யார்?" என்று கேட்டார். அதற்கு விடையாகப் பத்து சுலோகங்களை ("நிர்வாண சதகம்") உரைத்தார்.

(நான் இந்த உடம்பல்ல; இதிலுள்ள எதுவுமல்ல. நான் அகண்ட சச்சிதானந்த பிரும்மமே என்பது அதன் பொருள்.)

ஆதிசங்கரர் பால்யத்திலேயே எல்லாவற்றையும் நன்கு கற்றறிந்தவர். இருந்தாலும் ஒரு நல்ல குருவை நாடி நர்மதா தீரம் சென்றார். கிருஷ்ண பரமாத்மாவுக்கு ஒன்றும் தெரியாதா? இருந்தும் கம்சவதம் ஆனதும் சாந்திபினி என்ற முனிவரிடம் குருகுல வாசம் செய்து கல்வி கற்றார். ஏன்! சிவபெருமானே தன் குமாரன் முருகனிடம் உபதேசம் பெற்றார் என்றால் குரு மகிமையைப் பற்றிச் சொல்லவா வேண்டும்.

சங்கரரிடம் உயர்ந்த சிஷ்ய குணங்களைக் கண்டார் குரு. க்ரம ஸந்யாசத்திற்கு உகந்தவைகளை உபதேசித்தார். துறவிகள் நடத்த வேண்டிய அனுஷ்டானங்களை விஸ்வேஸ்வர ஸ்ம்ருதி கூறியபடி எடுத்துக் காட்டினார். குரு பரம்பரையைக் கூறி பிரும்ம ஸூத்திரம், பத்து உபநிஷத்துக்கள், கீதை, விஷ்ணு ஸகஸ்ர நாமம் ஆகியவைகளுக்கு பாஷ்யம் எழுதும்படி உத்தரவிட்டார். சங்கரர் அதன்படியே பாஷ்யங்களை இயற்றினார்.

**வியாச முத்திரை :**

ஒரு நாள் கங்கைக் கரையில் அவர் தம் சிஷ்யர்களுடன் ஸூத்ர பாஷ்யத்தைச் செய்துகொண்டிருக்கும் போது ஒரு கிழவர் அவரை அணுகி சில கேள்விகள் கேட்டார். சங்கரர் அவர் கேட்டதற்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டு வந்தார். இருப்பினும் கிழவர் விடவில்லை, இப்படி எட்டு நாட்கள் கடந்தன. கடைசியில் அக்கிழவர் வியாசராகத் தரிசனம் தந்தார். சங்கரர் செய்த பாஷ்யமே பிரும்ம ஸூத்திரத்திற்குப் பொருத்தமானது என்ற அத்தாட்சியை அளித்தார். வியாசர் வாயாலேயே அங்கீகாரம் பெற்றுவிட்ட சங்கரர் ஊர் ஊராக விஜயம் செய்து பண்டிதர்களிடம் தர்க்கம் செய்து தன் பாஷ்யப் பெருமையின் எல்லையை விஸ்தரித்துக் கொண்டு வந்தார்.

சங்கரர் காசியில் சில காலம் தங்கி சிஷ்யர்களுக்கு உபநிஷதங்களிலுள்ள ஆத்ம ஸ்வரூப தத்துவத்தை உபதேசித்து வந்தார். ஒரு சமயம் அவர் கங்கையில் ஸ்நானம் செய்துவிட்டு வரும்போது நான்கு நாய்களுடன் கூடிய ஒரு சண்டாளனை விலகிப் போகும்படிக் கூறினார்.

அவன் சிரித்து "உமது உபதேசத்திற்கும் நீங்கள் நடந்து கொள்வதற்கும் ஏன் இத்தனை முரண்பாடு. விலகிப்போ என்கிறீர்களே! எதை? உடலையா ஆத்மாவையா?" என்றான். ஆசார்யர் அப்போது 'மநீஷா பஞ்சகம்' என்ற ஐந்து சுலோகங்களால் வேதாந்த தத்துவத்தை எடுத்துச் சொல்லவும் அவனுக்குப் பதிலாக பரமசிவனே அங்கு அவருக்குக் காட்சி அளித்து அனுக்கிரஹித்தார்.

**உடம்பில் முத்திரை சூடு வேண்டாமே :**

ஆதிசங்கரர் வியாசர் கூறியபடி திக் விஜயம் செய்யக் கிளம்பினார். அரசர் துஷ்டர்களை அடக்குவது போல குருராஜர் துர்மதங்களை அடக்கினார்.

உடம்பில் சூல முத்திரை, விருஷப முத்திரையை சைவர்கள் சூடு போட்டுக் கொள்வது அப்போது வழக்கமாக இருந்தது. இது உடலை வருத்துவதாகும். ஆதிசங்கரர் இதுபற்றிக் கூறிய உபதேசமாவது:

"மனிதன் உடலில் நாபிக்குமேல் 'லோமபா' என்ற தேவரும் நாபிக்கும் கீழ் "அலோமா" என்ற தேவரும் இருக்கின்றனர். ஒவ்வொரு அங்கத்திலும் ஒவ்வொரு தேவரும், பித்ருக்களும், ரிஷிகளும் வசிக்கின்றனர். இவர்கள் வேத விதிப்படி நாம் செய்யும் கர்மாக்களைக் கண்டு மகிழ்கின்றனர். துஷ் கர்மாவைச் செய்தாலும் சரீரத்தைச் சூடிட்டாலும் நம்மை சபித்துவிட்டு வெளியேறுகின்றனர். உடம்பில் சூடு போட்டால் நெருப்புப் பட்ட வஸ்திரம் போல அத்தகைய உடல் அசுத்தமாகும்.

உடம்பில் சின் முத்திரைகளை சூடு இடும் வழக்கம் ஒழிந்தது.

நான்கு திக்குகளிலும் நான்கு மடங்களை ஏற்படுத்தி நான்கு சிஷ்யர்களை அவைகளுக்குத் தலைவராக்கி அத்வைத மதப் பிரசாரம் செய்ய ஆதிசங்கரர் திருவுளங்கொண்டார்.

**சிருங்கேரி சாரதா பிரதிஷ்டை :**

துங்கபத்ரா நதிக்கரையிலுள்ள சிருங்கேரியில் ஸ்ரீ சாரதா தேவியை பிரதிஷ்டை செய்தார். அங்கு ஸ்ரீ சக்ரத்தை அமைத்து நவ ஆவரண சக்திகளையும் பிரதிஷ்டை செய்தார். நிரந்தரமாக பூஜை நடைபெறவும், அத்வைத சித்தாந்தத்தைப் பிரசாரம் செய்யவும் ஒரு மடத்தை அமைத்து சுரேஸ்வரர் என்ற தன் சிஷ்யரை மடாதிபதியாக ஆக்கினார். கைலாசத்திலிருந்து கொண்டு வந்த ஸ்ரீ சந்திர மௌளீஸ்வர லிங்கத்தையும், ரத்ன கர்ப்ப கணபதியையும் அளித்து லோக க்ஷேமத்திற்காக

என்ற மோக்ஷத்தை அளிப்பவன். அவனுக்கு வசமானவள் சக்தி. உபநிஷத்துக்களால் வர்ணிக்கப்படும் பரமாத்மாவை அறிவதே மெய்ஞானம். அதனால்தான், அக்ஞானம் அகலும். மோக்ஷம் உண்டாகும். ஆகவே ஆதித்யன் அம்பிகை, விஷ்ணு, கணநாதன், மகேஸ்வரன் ஆகிய பஞ்சாயதனங்களையும் பூஜித்து முக்தி பெறுங்கள்'' என்றார். அவர்களும் இவர் உபதேசத்தை ஏற்றனர்.

துவாரகா மடம் :

துவாரகையில் மகாலக்ஷ்மியுடன் திருமாலும், ருத்ரகாளியுடன் ஸித்தேஸ்வரன் என்ற மகேஸ்வரனும் விளங்குகின்றனர். கோமதி என்பது இங்குள்ள புண்ணிய தீர்த்தம். இங்கு ஒரு மடத்தை ஸ்தாபித்து ஹஸ்தாமலகர் என்ற சிஷ்யரை அதன் தலைவராக்கினார்.

இங்கிருந்து கிருஷ்ண பகவான் லீலைகள் புரிந்த கோகுலம் பிருந்தாவனம் முதலிய இடங்களுக்குச் சென்றார். ஆதிசங்கரரின் விஷ்ணு பக்திக்கு கோகுல தர்சனம் ஒரு ப்ரமாணம். அவருடைய ப்ரகரண நூல்களில் சகுண நிர்க்குண பிரும்ம ஐக்கியம் என்ற இடத்தில் ஸ்ரீ கிருஷ்ணனையே சகுண பிரும்மமாகக் காட்டுவதும், மிக பிரசித்தமான பஜகோவிந்தம், ஹரிமீடே, நிருஸிம்ஹ பஞ்சகம், விஷ்ணு சகஸ்ரநாம பாஷ்யம் இவைகளே போதிய சான்றுகளாகும்.

ஹரித்வாரம் என்ற மாயாபுரியில் திரிபுராமபா குமாரர், பரவாதி தவானலர், வடுகநாதர், மஹாகுண்டு கணேஸ்வரர், திவாகராசார்யர், பிந்து மாதவர் என்று ஆறு மகா பண்டிதர்களும் ஆதிசங்கரர் உபதேசங்களைக் கேட்டு அவரது சிஷ்யர்களாயினர். அவர்கள் ஆதிசங்கரரைப் பார்த்து ''தாங்கள் போதிக்கும் அத்வைத வேதாந்தம் எல்லோருக்கும் எளிதில் விளங்காது. கலியின்

(41-ம் பக்கம் பார்க்க)



ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் கோயில்-திருப்புட்குழி.

பூஜை செய்துவர ஏற்பாடு செய்தார்.

தீர்த்தர், ஆஸ்ரமீ, வன, அரண்யா, கிரி, பர்வதர், ஸாகரர், ஸரஸ்வதி பாரதி புரீ என்ற பத்து வகை சம்பிரதாயங்களையும் ஏற்படுத்தினார். இவை சந்நியாஸ ஆச்ரம நாமாவுடன் பாரதி, கிருஷ்ண தீர்த்தர், மஹா தேவாஸ்ரமி, சச்சிதானந்த சரஸ்வதி, வித்யாரண்யர் என அழைக்கப்படும்.

இந்த சாரதலாயத்தைக் காக்க கிழக்கில் பைரவரையும் தெற்கில் துர்க்கையையும் மேற்கில் ஆஞ்சநேயரையும் வடக்கில் காளியையும் பிரதிஷ்டை செய்தார்.

பூரி போகவர்த்தன மடம் :

கிழக்கு திக்கிலுள்ள பூரி ஜகன்னாதத்தில் போகவர்த்தன மடம் என்ற பெயரில் ஒரு மடத்தைத் துவக்கினார். அது கோவர்த்தன மடம் என்று இப்போது அழைக்கப்படுகிறது. இங்கு பத்மபாதர் என்ற சிஷ்யரை தலைவராக்கினார்.

உஜ்ஜயினி க்ஷேத்திரத்தில் ஆதிசங்கரர் தங்கி இருந்தபோது சில தீவிர சாக்தர்களை இவர் சந்தித்தார். இவர்கள் ரத்த சந்தனத்தை உடலிலும் குங்குமத்தை நெற்றியிலும் சிவப்பு வஸ்திரமும் தரித்து இருந்தனர். இவர்கள் எல்லாரும் தேவி தந்திரத்தில் நிபுணர்கள். ஆதிசங்கரர் அவர்களைப் பார்த்து சாக்த மத சித்தாந்தத்தைக் கூறும்படிக் கேட்டார். அவர்கள் அளித்த பதில்:

''பரம சிவத்துடன் கூடிய பராசக்தியே உலகத்திற்குக் காரணம். குணாதீத ஸ்வரூபிணி அவள். அவளது சக்தியின் பிரவேசத்தால் மஹத் தத்துவம் உண்டானது. அதன் மூலமாக மும்மூர்த்திகளின் மூன்று சக்திகள் தோன்றினர். அவள் சின்னமான குங்குமத்தை நாங்கள் எப்போதும் அணிகிறோம். ஸ்ரீ வித்யோபாஸர்களான நாங்கள் ஜீவன் முக்தர்கள். சக்தி ஸ்வாதீன வல்லபை. அவள் சொல்படி கேட்பவரே சிவன்''.

ஆதிசங்கரர் அவர்களுக்கு உபதேசித்ததாவது:

''உங்கள் மதம் சிறந்ததே. ஆயினும் புருஷன் பிரக்ருதியின் சக்தியை அதிகரித்துள்ளான். புருஷனே கைவல்யம்

# அகோபிலம்

பல வன விலங்குகள் வாழுகின்ற காடுகளையுடைய மலைப் பிரதேசம் அகோபிலம். இம்மலைப் பிரதேசத்தினிடையே ஓர் அமைதியான இடத்தைத் தனதாக்கிக் கொண்டு நாடி வருவோரை யெல்லாம் ரக்ஷித்து அருளை வாரி வழங்கி அனுக்ரகம் செய்கிறார் ஸ்ரீ நரசிம்மர்.

இச் சோழவள நாட்டின் ஒரு பகுதியிலே ஒரு சமயம், தான் பெற்ற மந்திர உபதேசத்தினால் ஸ்ரீ நரசிம்ம மூர்த்தியை ஒரு கணமேனும் காண அவாக்கொண்டு கானடர்ந்த பகுதியில் தவம் செய்யத் தொடங்குகிறான் சனந்தனன் எனும் இளைஞன் அன்ன ஆகாரமின்றித் தன்னிலை மறந்து சதா சர்வ காலமும் ஸ்ரீ நரசிம்மனின் நினைவாகவேஇருந்துதவம் செய்து கொண்டிருந்தான்.

பல நாட்கள் கழிந்தன. தவத்தின் பலனை சனந்தனன்அறிந்தானில்லை. அன்று காலை வேளை. காடுகளில் பல ஆண்டுகளாக வேட்டையாடிப் பிழைக்கும் வழக்கமுடைய வேடுவன் ஒருவன் தான் அடித்த மானைத்தேடி காடெங்கிலும் சுற்றி வந்தான். அவ்விதம் அலையும்போது, ஓர் மரத்தடியில் தன்னை மறந்து தவத்தில் ஆழ்ந்திருக்கும் சனந்தனனைக் கண்டான். தன் மானைக் காணாத வேதனையில் அவன் சனந்தனனிடம், "சாமீ, இவ் வழியாக நான் அடித்த மான் ஓடியதா?' என்றான்.

'மானா? எதுவும் இவ்வழியாகஓடவில்லையே!' எனச் சனந்தனன் கூறினான்.

'தன்னைப்போல் வேட்டையாடும் இனத்தைச் சேர்ந்தவரல்லாத ஒருவருக்கு அடர்ந்த காட்டினில் என்ன வேலை?' எனச் சிறிதே யோசித்த வேடுவன் " சாமீ, நான் வேட்டையாட இக்காடெங்கிலும் ஓடி அலைகிறேன். உனக்கேன் சாமீ, இந்தக் காட்டுவாசம். இங்கு உட்கார்ந்து கொண்டு நீயென்ன செய்கிறாய்" என்றான்.

'நீ உன் மானைத் தேடி அலைவது போல நானும் எனது இருதயத்தில் குடிகொண்டிருக்கும் நரசிம்மரைக் காணக் காத்திருக்கிறேன்".

"நரசிம்மரா,அது என்னது சாமீ?"

"தலை சிங்கமாகவும் உடல் மனிதனாகவும் உள்ள உருவம் அப்பா அது"

"சாமீ, சத்தியமா நான் சொல்கிறேன். இது மாதிரி உருவம் இந்தக் காட்டிலே இருக்கிறதா எனக்குத் தெரியவில்லை. இது நாள் வரை எத்தனை வருஷமோ இதே காட்டிலே நான் வேட்டையாடிகிட்டுஇருக்கேன். எனக்குத் தெரியாததா சாமீ? சரி. இந்த இடத்துலே உட்காந்துகிட்டு எப்படி சாமீ அந்த உருவத்தைப் பார்த்துட முடியும்?"

"என்னாலே பார்க்க முடியுமப்பா? அதற்குத்தானே மந்திரம் சொல்லி தவம் பண்றேன்".

"தவமா? எதுக்கு சாமீ இதெல்லாம். இப்ப நீ இந்த விஷயத்தை எங்கிட்ட சொல்லிவிட்ட இல்லை. பாரேன். நாளை இருட்டறத்துக்குள்ளாறே இந்த இடத்துக்கு அதேச் உருவத்தை எப்பாடு பட்டாவது நான் கொண்டு வந்து நிறுத்தாட்டி இல்லாட்டி என் உயிரையே விட்டு விடுகிறேன் சாமீ. இதுசத்தியம்".

பதிலுக்குக்கூட காத்திராமல் தன் சத்தியத்தை நிறைவேற்ற அவ்விடத்தை விட்டு அகன்றான் வேடுவன்.

"சத்தியம் செய்துவிட்டு வந்து விட்டோமே, நம்மால் முடியுமா?" என்றொரு சந்தேகம் ஒரு புறம்.

"என்னால் ஏன் முடியாது? எனக்குத் தெரியாத இடமே இந்தக் காட்டினில் கிடையாது. அப்படியிருக்க இந்த உருவத்தைக் கண்டுபிடிப்பதில் நிச்சயமாக அதிக சிரமம் இருக்காது' என்ற உறுதி ஒரு புறம்.

அன்றிரவு வரை தேடிக் களைத்து மனம் சோர்ந்து வீடு திரும்பினான் வேடுவன்.

இரவு ஒரு நிமிடம் கூட கண்ணயர முடியவில்லை. நினைவு முழுதும் நரசிம்மரேதான்.

இருள் ஆதவனைக் கண்ட மாத்திரத்தில் விலக ஆரம்பித்தது. அதிகாலைப் பொழுதிலேயே தன் காரியத்தில் முனைந்தவனாய் உற்சாகத்துடன் கிளம்பிவிட்டான் வேடுவன்.

ஸ்ரீமதி கமலா ரங்காச்சாரி,

சென்னை—86.

காலை வெய்யிலின் கொடுமை தாளவில்லை. உணவினை மறந்து அந்த உருவத்தையே மனதினில் நிறுத்தி, அதையன்றி வேறெதுவுமே நினைப்பில் இல்லாதவனாய் காடு முழுவதும் சல்லடைப்போட்டுத் தேடிவிட்டான். எங்குமே காணாத அவ்வுருவம் நிஜத்திலேயே இருக்கும் ஒன்றுதானா என்ற சந்தேகம் அவன் மனதில் ஒரு கணம் தோன்றியது.

நிச்சயம் அவ்வாறு இல்லாமல் இருக்காது. தவம் செய்பவர் பொய் சொல்லியிருக்கமாட்டார் என்ற திடமான நம்பிக்கையுடன் விடாமல் தேடினான். ஆதவன் தன் சூடான கரங்களை அடக்கி மேகங்களுக்குள் மறைய ஆரம்பித்தான். வேடுவனின்

# நித்ய அபிஷேக ஸேவை

**யா**த்திரிகர்களின் வசதிக்காக திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தானின் ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயிலில் புதியதாக "நித்ய அபிஷேக ஸேவை" ஒன்று புகுத்தப்பட்டுள்ளது.

இந்த ஸேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ஆண்டொன்றுக்கு ரூ. 42/- செலுத்துதலோ அல்லது தேசியமாக்கப்பட்டுள்ள வங்கி ஏதேனும் ஒன்றில் "செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி". எனும் பெயரில் ரூ. 500/- முதலீடு செய்தலோ வேண்டும். முதலீடு செய்யப்பட்ட தொகைக்குக் கிடைக்கப்பெறும் வட்டித்தொகையினைக் கொண்டு தொடர்ந்து கிருஹஸ்தரின் பெயரில் நிரந்தரமாக ஸேவை நடத்தப்பெறும். பெரியவர்கள் இருவர் வருடத்திற்கு இருமுறை இச்ஸேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

நிரந்தரமாக தொடர்ந்து இச்ஸேவையினை நடத்த விரும்புவர் முதலாண்டுக்கான ரூ. 42/- செலுத்துவதோடு ரூ. 500/- செலுத்துதல் வேண்டும்.

திருப்பதி நகரத்திலிருந்து 2 கி. மீ. தொலைவில் ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில் உள்ளது. கோயில் வளாகத்திற்குள் ஆழ்வார் தீர்த்தம் எனும் திருக்குளம் ஒன்றுள்ளது. காலையிலும் மாலையிலும் அபிஷேகம் நாளும் இக்கோயிலில் நடைபெறுகிறது.

---

மனம் நிம்மதி யிழந்தது, இன்னும் சிறிது நேரத்திற்குள் நான் அந்த உருவத்தைக் காணாவிடில் உயிர் இழப்பது நிச்சயம் என்ற நினைக்கையில் அவன் வேதனை அடைந்தான்.

ஆதவனும் மறைந்துவிட்டான். வேடுவன் கூறிய கால அளவும் முடிந்துவிட்டது. தன் சத்தியத்தை நிறைவேற்றாது இருக்கிறோமே எனத் தன்னையே நொந்துகொண்டான். அருகினில் தொங்கிக் கொண்டிருந்த ஆலம் விழுதுகளை முறுக்கிக் கயிறுபோல் திரித்து தன் உயிரை விட முனைந்தான்.

திடீரென்று அந்த இருட்டும் வேளையிலே மின்னலென ஒரு ஒளி. அவ்வொளியினைக் கூர்ந்து நோக்கினான் வேடுவன். தான் காண்பது நிஜம்தானா என அதிர்வடைந்தான். தான் தேடிக்கொண்டிருக்கும் உருவம் இதுவேதான் என பூர்ணமாக உணர்ந்து உயிர் போக்கிக்கொள்ளும் முயற்சியைத் தவிர்த்து அந்த சிங்க உருவத்தை நெருங்கினான். தன் பக்தனின் ஆத்மார்த்தமான வேண்டுதலுக்குச் செவிசாய்க்க ஸ்ரீமந்நாராயணன் தவறவில்லை. வேடுவன் தன் அறியாமையால், வந்துள்ளவன் யாரென்று அறியாமல் சனந்தனன் கூறிய அடையாளங்களைக் கண்டு, அருகில் கிடந்த வேர்களைக் கயிறாகத் திரித்து அந்த சிங்கமுகத்தானைக் கட்டி அவசரம் அவசரமாகச் சனந்தனனிடம் இழுத்துச் சென்றான்.

"சாமீ!' நீங்க கேட்டபடி அந்த சிங்கத் தலையைக் கட்டி இழுத்துகிட்டு வந்திருக்கிறேன். பாருங்க' என்று பெருமையுடன் கூறி நின்றான் வேடுவன்.

"என்ன? சிங்கமுகத்தானை அழைத்து வந்துவிட்டாயா? எங்கேயப்பா? கட்டி இழுத்து வந்திருப்பதாகச் சொல்கிறாயே! உன் கையில் வெறும் கயிறுதானே இருக்கிறது? எங்கே அந்த நரசிம்மர்?"

"என்ன சாமீ? நான் கட்டிட்டு வந்திருக்கிறது உன் கண்ணுக்குத் தெரியவில்லை?"

"என்ன? உன் கண்களுக்குத் தெரிவதுஎனக்குத் தெரியவில்லையா? பல நாள் தவம் செய்து நான் பார்க்கக் காத்துக்கொண்டிருக்கும் நரசிம்மர் என் கண்களுக்குப் புலப்படவில்லையே? வேடுவனுக்கு ஏற்பட்டுள்ளமன மகிழ்ச்சியைநான்அடையக் கொடுத்துவைக்கவில்லையா? என்ன சோதனை இது? நரசிம்மா! என் தவத்தில் ஏதேனும் குறைபாடு கண்டாயா? நான் செய்த பாவம்தான் என்ன?" என்று புலம்பினான் சனந்தனன்.

"சனந்தனா! வருந்தாதே! அறிவினால் எளியவனாயினும் வேடுவன் என்னை அணுக வேண்டுமென ஸர்வ காலமும் என் நினைவாகவே இருந்து காணும் பாக்கியம் பெற்றான். நீயோ வேடுவனுக்கு நான் காட்சி கொடுப்பது நடவாத காரியம் என எண்ணி இறுமாந்திருந்தாய். உன் தவம் தூய்மையானதாக இருப்பினும் வேடுவன் எண்ணத்தால் உயர்ந்துவிட்டான். ஆகவே நான் அவனுக்குக் காட்சி அளித்தேன். உனக்கு நான் காட்சி அளிக்காவிடினும் அசரீரி வாக்கால் அருள் வழங்குகிறேன்". என்று நிசப்தமான இரவு நேரத்தில் ஸ்ரீ நரசிம்மரின் வாக்கு அசரீரியாய்க் கேட்டது.

நம்பிக்கையுடனும், உறுதியுடனும் தன்னை அடைந்தவருக்கெல்லாம் இன்றும் அருள் மழைபொழிந்து மகிழ்விக்கிறார் ஸ்ரீஅகோபில நரசிம்மர்.



# ஸம்ப்ரோக்ஷணம் கண்டருளிய திருமலை எம்பெருமானார்

இற்றைக்கு சுமார் 35 ஆண்டு கட்கு முன்னர் T. T. D. bulletinல் (சமய இதழ்) திருமலை, திருப்பதி யிலும் அவற்றின் சுற்று வட்டாரத்தி லுமுள்ள செப்புப் படிமங்களைப் பற்றியும், கருங்கற் சிற்பங்களைப் பற்றியும் தொடர்ந்து நிழற்படங் களுடன் சொற்பொருளாழம் பொதிந்த ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளி வந்து கொண்டிருந்தன. அவற் றுள் திருமலையில் உடையவர் என்ற இராமானுஜருக்கு மட்டும் தனிச் சந்நதி ஏற்படுவானேன் என்ற வினாவுக்கு விடையாக சில கூறி ஆங்கே பிரதிஷ்டை செய்யப்பட் டுள்ள எம்பெருமானார் விக்ரகத்தின் அமைப்பு பற்றியும் எழுதப்பட்டிருந் தது. பிரபன்ன விக்ரகங்களுக்கு இலக் கணம் வகுக்க வந்த சிற்ப நூல்கள் அவர்கட்கு அஞ்சலி, சிகை, பிரபன்ன பாகை, ஞான முத்திரை, நிற்றல், இருத்தல் போன்ற இலக்கணங்களை வகுத்துக்கூறுகின்றன. ஸ்ரீ இராமானு ஜாசாரியாருக்கு எந்தவிதமான மாறு தலில்லாமல் கோயில்கள்தோறும் அஞ்சலி ஹஸ்தராகவே அவர் எழுந்தருளப் பண்ணப்பட்டிருப்பது பிரசித்தம். நம்மாழ்வாருக்கு அஞ் சலி, ஞான முத்திரை என்ற இரண்டு திருக்கோலங்களும் வழக்கில் உள்ளன. ஏனைய ஆசாரியர்களில் நாதமுனி, வேதாந்தாசாரியார் இவ்விருவருக்கும் ஞானமுத்திரையோடுகூடியகோலமே கொள்ளப்பட்டுள்ளது என்று இவ் விவரங்களைப் பரக்கக்கூறி இச்சன் னதி திருமலை அனந்தான் பிள்ளை யால் நிறுவப்பட்டது என்றும், உடை யவருக்கே அசாதாரணமான ஒரு சிறப்பினை இவ்வமைப்பு சுட்டுகிறது என்றும் வேறு எவ்விடத்திலும் இத் தகைய இவ்வமைப்பு கொள்ளப்பட வில்லை என்றும், ஏதோ வாழ்க்கை வரலாற்றுப் பின்னணி கொண்டு அமைந்திருக்கலாமென்றும் கூறு கிறது. மேலும் 'ஞான முத்திரை வைகுண்ட ஹஸ்தம் ஆகிய சேராச் சேர்த்திக்கு யாம் பொருள் அறிந் திலம், வல்லார் வாய் கேட்டுணர்க' என்று அக்கட்டுரை முடிவடைகிறது.

இக்கட்டுரையைப்பற்றி திருமலை யில் பெரிய ஜீயராக விளங்காநின்ற சாது ராமானுஜாசாரியார் என்ற பூர்வாச்சிரம திருநாமத்துடன் விளங் கிய பெரிய ஜீயரிடம் இதைப்பற்றி விண்ணப்பித்த பொழுது அவர் கீழ்க் கண்டவாறு விளக்கம் அருளினார்.

இராமானுஜர் வரலாற்றினைக் கூறுகின்ற குருபரம்பரை போன்ற நூல்களில் இது தெளிவு என்று கூறி எதிரே உள்ள ஒரு சித்திரத்தை எடுத்து வரச்செய்தார். அப்படத்தில் நடுவே திருமலை அப்பன் காட்சி தருகின் றான். முன் மண்டபம் தெரிகிறது. திருமலையப்பனுக்கு இருமருங்கிலும் இருவர் நிற்கின்றனர். சாளரத்தின் இடுக்கின் வழியாக இருவர் பார்த்து அடக்கத்துடன் ஒருவருக்கு ஒருவர் கலந்து கிசுகிசுவென்று பேசிக்கொள் வதை அப்படம் சித்தரிக்கின்றது. படத்தில் எம்பெருமானுக்கு மருங்கே நிற்பவரில் ஒருவர் இராமானுஜர். எதிரே நிற்பவர் பிறவி ஊமை. 'உய் யும் வகை எனக்கு உளதா! உய்யும் வகை எனக்கு உளதா!' எனக்கசிந் துருகி, கண்ண நீர் பெருக்கி, ஆசாரி யரிடம் இவ்வூமை விண்ணப்பிக்க அருளே உருவான ஆசாரியர் திரு மலை எம்பெருமானின் திருவடிகளே தனக்குத் தஞ்சம் எனக்காட்டி, 'நீ உய்ந்து போனாய்' என்றுகூறி தன் னுடைய தேனே மலர்ப்பாதங்களை ஊமையின் சிரசிலே சேர்த்தருளி அனுக்ரகித்தார். தன்னுடைய திரு வடி இணைகளே உய்யும் உபாயம் என்று இடது திருக்கரத்தினால் காட்டி உணர்த்தி அருளினார். இங்கு உபதேசிப்பது 'ஸ்ரீமதே இராமானு ஜாய நம:' என்பது. வரதமுத்திரை யுடன் கூடிய மற்றொரு திருக்கரத் தால் 'ராமானுஜஸ்ய சரணௌ சரணம் பிரபத்யே' என்பதும் உப தேசிக்கப்படுகிறது. இந்நிகழ்ச்சி யினைப் பார்க்கும் வாய்ப்பமைந்த நிலையில் சாளரத்துக்கு வெளியே இருந்த இருவரில் ஒருவர் ஆண்டான், மற்றொருவர் ஆழ்வான். இருவரும் 'ஐயோ! பேசத் தெரிந்து பாழாய்ப் போனோமே. ஊமையாய் இருந்தால் உய்ந்து போயிருக்கலாமே. நெறி காட்டி என்னை நீக்கி விட்டாரே' என்று அவர்கள் அநுதபிப்பது சித் திரத்தில் தெரிகிறது என்று ஜீயர் சுட்டிக் காட்டினார். இராமானு ஜரை இவ்வுலகத்திற்கும், அவ்வுலகத் திற்கும் உரியர் ஆக்கி உடையவர் என்ற திருப்பெயரினை பெரிய பெரு மாள் கொடுத்தருளினார். மேல் வீடும் இவர் இட்ட வழக்காக்கினார். ஊமை மேல்வீடு பெற்றதும் இப்பேற் றினால் என்பதும் தெளிவாம். பேரு வகையுடன் வெளியே வந்த அந்த ஊமை கைகூப்பியவாறே எம்பெரு மானாருடைய திருவடித் தாமரை

கொட்டையூர், தம்பு. ப. கிருஷ்ணசாமி

## தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

### தமிழ்

| | ரூ. காசு. |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (அச்சில்) (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |
| 9. சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 10. முக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |
| 11. திருப்பாவை (அச்சில்) | |

### சம்ஸ்கிருதம்

| | |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஒ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "மக்கள் தொடர்பு அலுவலர், நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

களை நினைந்து, அதே நிலையில் மேல் வீடு பெற்றதும், இது எல்லோரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. இந்த வரலாற்று உண்மையினை அடியொற்றி,

"சிந்தையினோடு கரணங்கள் யாவும் சிதைந்து-மூன்னாள்
அந்த முற்றாழ்ந்தது கண்டு அவை யென் தனக்கன்றருளால்
தந்த அரங்கனும் தன்சரண் தந்திலன் தானதுதந்து
எந்தை ராமானுசன் வந்தெடுத் தனன் இன்றென்னையே"

என்றார் அமுதனார். இக்கருத்தை வெளியிடுவது போன்று எம்பெருமானாரின் சிற்பப் படிவம் திருமலை மேல் பிரதிஷ்டை செய்யப்பட்டது. எம்பெருமான்வைகுண்டஹஸ்தனாய் மேல்வீடு தருகின்றான். அவன் தர மறுக்கிலும் எம்பெருமானார் கொடுக்கின்றார். 'கொடுக்கின்றேன் என்ற நிலையில் திருமலையப்பனைப் போன்று வரத ஹஸ்த திருக்கரத்துடன் ஸேவை ஸாதிக்கும் எம்பெருமானார் சாலப் பெரியர், வேறெங்கும் கண்டற்கரியர். ஸேவித்து உய்ந்து போமின்' என்று கூறுகிறார். உடன் வாழ்ந்த எம்பெருமானாரது சீடர். திருமலை அனந்தாண்பிள்ளை என்ற ஆசாரியரால் அமைக்கப்பட்ட இச் சன்னதி திருமலையப்பன் சந்ததியிலும், நம் போல்வார்களும் வழிபட்டுய்ய விரும்பப்படும் திருக்கோலம் என்றுகூறி முடித்தார். அந்த வயதில் அவருக்கு இருந்த ஞானத்தெளிவும், உண்மையை வெளியிடத் துடித்த அருளுடைமையையும்,உடையவரின் சிந்தனையினாலே பூரித்து, ரோம கூபங்களாய் மயிர்க் கூச்செறிந்து கண்கள் நீர்மல்கி, அடிக்டி அடைக்கும் அருட்சொற்களுடன் அவரைக் கண்டபோது நான் பரவசமானேன். இதை வெளியிட அடியேனுக்கு வாய்ப்பு கிடைப்பதை எண்ணி பேரானந்தம் அடைகின்றேன்.



# இராமனா? க்ருஷ்ணனா?

திரு. லா. ஸ்ரீநிவாஸன், புதுதில்லி.

எம்பெருமானின் பல அவதாரங்களில் இராமாவதாரமும் க்ருஷ்ணாவதாரமும் பக்தர்களின் மனதை மிகவும் கவர்வன. இவ்விரண்டுக்குள்ளும் எது சிறந்தது என்பதைப்பற்றி பக்தர்களுக்குள் சில சமயங்களில் ஸ்நேஹ பூர்வமாகவும் வேறு அவஸரங்களில் விவாத பூர்வமாகவும் சர்ச்சைகள் ஏற்படுவதுண்டு. அதைப் போல் ஆழ்வார்களின் அநுபவங்களும் பலபடியாக இருக்கும். அவற்றுள் சில வற்றை இங்கு ஈண்டு அநுபவிப்போம்.

**இராமனின் மேன்மை :**

கற்பாரி ராமபிரானையல்லால்
மற்றும் கற்பரேர?
புற்பாமுதலாப் புல்லெறும் பாதி
யொன்றின்றியே
நற்பாலயோத்தியில் வாழும் சராசரம்
முற்றவும்
நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார்
பெற்ற நாட்டுளே.
(திருவாய்மொழி 7-5-1)

என்றருளினார் நம்மாழ்வார்.

புல்லாகிய பதார்த்தம் முதலாகவும், மிக அற்பமான எறும்பு முதலாகவும், இராம குணங்கள் நடையாடுகிற நல்ல தேசமான அயோத்யா புரியில் வாழ்கிற ஸ்தாவர ஜங்கமங்களானவை எல்லாவற்றையும் நாம் அறியக் கூடிய ஒருவித ஸாதநாநுஷ்டானமுமில்லாமலிருக்கச்செய்தேயும் பிரமன் படைத்த இவ்வுலகுக்குள்ளே நல்ல ஸ்வபாவத்தையுடைத்தாம்படி பண்ணினான்; ஆதலால் உலகில் கற்க விரும்புமவர்கள் குணக்கடலாகிய ஸ்ரீராமனைத் தவிர மற்றொரு வ்யக்தியைக் கற்க நினைப்பர்களோ? என்றபடி.

இங்கு ஈடு—“மற்றுமென்று தேவதாந்தர பஜநாதிகளை வ்யாவர்த்திக்கிறாரல்லர், பஜநீயவஸ்துவிலேகூறிடுகிறார். தேவதாந்தரமாகில் பதர் கூட்டிக் கழிக்குமவரல்லரிறே, பரத்வத்தையும் அவதாராந்தரங்களையும் கழிக்கிறார்'' என்று உள்ளது. அதாவது ‘மற்றும்’ என்ற பதத்தினால் வேறு தேவதைகளைத் தொழுவதைச் சொல்லவில்லை. தொழத் தகுந்த எம்பெருமானின் பல நிலைகளிலேயே பங்கு போடுகிறார். வேறு தேவதைகளைக் குறிப்பதானால் பதரைக் கூட்டிக் கழிப்பது போலாம். அவ்விதம் செய்பவரல்லர் ஆழ்வார். பகவந் நிலைகளுக்குள் இராமனைத் தவிர மற்ற அவதாரங்களையும் பரத்வத்தையும் தள்ளுகிறார் என்றபடி.

இங்கு மேலும் வ்யாக்யானம் வருமாறு—भावो नान्यत्र गच्छति என்னுமாப் போலே... என்னை மீட்டாராகிலும் என்னுடைய நெஞ்சை மீட்கப் போகாது. “என்னுடைய நன்னெஞ்சந்தன்னை அகல்விக்கத்தானும் நில்லானினி'' என்னுமாப் போலே, ஸர்வ சக்தியான அவனாலும் மீட்கப் போகாதென்கை. अन्यत्र न गच्छति “கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே'' (அமலனாதிபிரான்) என்னுமாப் போலே. अन्यत्र என்கிறது போகிற விடத்தின் பேரும் சொல்லுகை அஸஹ்யமானபடி. “மற்றாரானும் உண்டென்பார்'' (சிறிய திருமடல்) என்னுமாப் போலே இவரும் ‘மற்றும் கற்பரோ’ என்கிறார். இது போலே அமலனாதிபிரான் ப்ரவேசத்தில் “अन्यत्र” என்கிறது. மற்றாரானுமுண்டென்பார்'' என்னுமாப்போலே கொடு போக நினைத்த தேசத்தின் பேரும்கூட தனக்கு அஸஹ்யமாயிருக்கிறபடி'' என்றும் வ்யாக்யானம் உள்ளது.

சக்ரவர்த்தித் திருமகன் சிறிய திருவடியைத் தன்னடிச் சோதிக்கு அழைத்துச் செல்ல விரும்பியபோது அவர் இவ்விதம் பதிலளித்தார்—

**स्नेहो मे परमो राजन् त्वयि नित्यं प्रतिष्ठितः।**
**भक्तिश्च नियता वीर भावो नान्यत्र गच्छति।।**

“ஸ்வாமியே! தேவரீரிடத்தில் எனக்கு மேலான அன்பானது எப்போதும் நிலை நிற்கிறது. வீரரே! உம்மிடத்தில் பக்தியும் நித்யமாயிரா நின்றது. என் நினைவு வேறெங்கும் (ஸ்ரீ வைகுண்ட நாதனிடத்திலும்) செல்லுகின்றதில்லை'' என்றபடி. ஆக, போகிற இடமான ஸ்ரீ வைகுண்டத்தின் பேரும் தமக்கு வாய்விட்டுச் சொல்லவும் அஸஹ்யமாயிருந்ததாம் ஆஞ்ஜனேயருக்கு. ஆகவேஅதை अन्यत्र என்று மறைமுகமாகக் குறிப்பிட்டார் என்றபடி.

“கண்கள் மற்றொன்றினைக் காணாவே'' என்றவிடத்தில் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம் இங்ஙனமுள்ளது: भावो नान्यत्रगच्छति போலே ‘கண்ணுக்குப் பச்சையிட்டாலும் வேறொரு அர்ச்சாவதாரம் அவதார விசேஷம் இவற்றை இப்படி விரும்பி போக்யமென்று கருதாது'' என்று. ஸ்வாமி தேசிகன் முநிவாஹன போகம் என்ற வ்யாக்யானத்தில் இவ்விதம் அருள்கிறார்: “பெரிய பெருமாள் திருமேனியிலே திருமலை முதலாகக் கோயில் கொண்ட அர்ச்சாவதாரங்களிலும், இராமக்ருஷ்ண வாமன வடபத்ர சயநாதிகளிலும் உள்ள போக்யதையெல்லாம் அநுபவித்து இவ்வாபிருப்யத்திலே ஈடுபட்ட என் கண்

கள் மற்றும் பரவ்யூஹ விபவாதி களான திருமேனிகளை எல்லாம் சேரக் காட்டினாலும் ஸ்தநந்தயத் துக்கு (கைக் குழந்தைக்கு) போக் யாந்தரங்கள் (தாய் முலையைத் தவிர மற்ற பொருள்கள்) ருசியாதாப் போலே, भावो नान्यत्र गच्छति என்கிற படியே அவையொன்றும் ருசியாது என்கிறார்ஆகவுமாம்.'' ஆக, இரண்டு ஆசிரியர்களும் இங்கு 'மற்றொன் றினை' என்பதனால் பெருமானின் மற்ற ரூபங்களை ஆழ்வார் அனு மனைப் போல் அஸஹ்யமாகக் கரு தினார் என்று கொள்ள இடமுள்ளது.

'சிக்கன மற்றாரானுமுண்டென் பார் என்பதும்' என்ற சிறிய திரு மடல் பங்க்திக்குவ்யாக்யானம் செய்த பெரியவாச்சான்பிள்ளை வருமாறு கூறுகிறார்: "அல்பாஸ்திரமென்று இப்புருஷார்த்தங்களை தூஷித்து ஆனந்த மயமான அந்தமில் பேரின்ப மாய் நிலை நின்ற புருஷார்த்தம் உண்டு என்பார்கள். இப்படிக் காண எண்ணாதே அவர்கள் வசஸ்ஸமுத்ரத் திலே கேட்டுப்போம் இத்தனை என் கை. ஆரானும் என் கையாலே, அவ் யபதேசயருமாய் அவ்யுத்பன்னருமா யிருப்பார் சிலரென்கை''. பரகால நாயகி தான் விரும்பிய நாயகனை அடைய முடியாமல் மடலெடுக்க உறுதி கொண்டு இவ்விதம் வாதாடு கிறாள்—"தர்மம், அர்த்தம், காமம்" என்ற மூன்றே உண்மையான புரு ஷார்த்தங்கள் - அவற்றுள் காமம் முக்யமானது. இம்மூன்றும் அல்ப மானவை, நிலையில்லாதவை, இவற் றைக் காட்டிலும் வேறான ஆனந்த மளிப்பதால் 'அந்தமில் பேரின்பம்' என்னப்படுவதான மோக்ஷ புருஷார்த் தமே உயர்ந்தது, நிலையானது என் பதெல்லாம் பெயர் சொல்லத் தகா தவர்களாய், அறிவிலிகளாய் இருப் பார் சிலருடைய வீண் பேச்சு. அவர் கள் சொல்லும் மோக்ஷத்தைப் பார்த்தவர் ஒருவருமில்லை என்று. நாயகனைப் பெறாத ரோஷத்தால் அவள் நாஸ்திகவாத எல்லைக்குச் செல்கிறாள். ஆனால் இவள் நாய கன் அந்த மோக்ஷத்தையளிக்கும் ஸ்ரீ வைகுண்ட நாதனேயாகையால் இவ ளாலும் மோக்ஷ புருஷார்த்தம் உண் மையில் இல்லை செய்யப்படவில்லை. ஆக இங்கு நாம் கவனிக்க வேண்டி யது ஆழ்வார் மோக்ஷம் என்பதைக் கூறவும் விரும்பாமல் அதை மறை முகமாக 'மற்று' என்று குறிப்பிட் டார் என்பதாம்.

ஆக, இராமனைத் தவிர மற்ற எம் பிரானின் எவ்வித வடிவமும் போக்ய மல்ல என்று அறுதியிட்டு இராமனின் மேன்மை வெளியிடப்பட்டது.

**இராமனே மனத்துக்கினியான் :**

சினத்தினால் தென்னிலங்கைக்
கோமானைச் செற்ற
மனதுக்கினியானைப் பாடவும் நீ வாய்
திறவாய்

என்ற திருப்பாவை(12)ப் பாசுரத் தில் 'மனத்துக்கினியானை' என்ப தற்கு இவ்விதம் வ்யாக்யானம் செய் தனர். 'வெற்ற வெறிதே பெற்ற தாய் வேம்பேயாக வளர்த்தாளே' (நாச்சியார் திருமொழி 13-7) என் றும் 'அஞ்சவுரப்பாள சோதை ஆணாட விட்டிட்டிருக்கும் வஞ்சகப் பேய்ச்சி பாலுண்ட மசுமையிலீ' (நாச்சியார் திருமொழி 3-9) என் றும், 'யசோதை நங்காய் உன் மகனைக் கூவாய்' என்றும் கதறும் படி பெண் பிறந்தாரைப் படுகுலை யடிக்கும் க்ருஷ்ணனைப் போலன் றிக்கே, பெண் பிறந்தார்க்காக படா தன பட்டவனாகையாலே, நம் நெஞ் சுக்குத் தென்றலும், நிலவும், சந்தன மும் போலே இனியனாயிருப்பவனை. பெண்களைத் துடிக்க வைத்துப்பின் பச்சாத்தாபமுமின்றிக்கே யிருக்கும் க்ருஷ்ணனைப் போலன்றிக்கே सञ्जातबाष्पः परवीरहन्ता என்று சத்ருக்களுக் கும் கண்ணீர்விடும்படியான மஹா குணசாலியை(மனத்துக்கினியானைப் பாடவும்) 'கண்ணன் நாமமே குழறிக் கொன்றீர்' (திருவாய்மொழி 9-5-8) என்னப்படுவனுடைய நாமத்தையோ நாங்கள் பாடினோம்? இறந்தவரை யும் உயிர்ப்பிக்கும் இராம வ்ருத் தாந்தத்தையன்றோ சொன்னோம். தன் காரியத்தை முடித்து நமக்கு உப கரித்ததாக நினைக்குமவனையோ நாங்கள் சொன்னோம்? நம் காரி யத்தைத் தன் பேறாகச் செய்யு மவனையன்றோ பாடினோம். 'பெற்ற தாய் வேம்பேயாக வளர்த் தாளே' என்று பெற்ற வயிற்றுக்குப் பழி வாங்கி வைக்குமவனையோ சொல்லிற்று? कौसल्या सुप्रजा राम என்று பெற்ற வயிற்றுக்குப் பட்டங்கட்டின வனையன்றோ சொன்னோம் என்று.

**இராமனைக் குறை கூறாமை :**

மானேய் நோக்கிமடவாளை மார்வில்
கொண்டாய் மாதவா!
கூனே சிதையவுண்டைவில் நிறத்தில்
தெறித்தாய்! கோவிந்தா!

என்று நம்மாழ்வார் அருளினார் திரு வாய்மொழியில் (1-5-5).

'கூனே சிதைய' என்கிற விடத் துக்கு ஸ்ரீராம க்ருஷ்ண வ்ருத்தாந் தங்களிரண்டையும் வ்யாக்யானங் களில் முன்னோர்கள் குறிப்பிட்டுள் ளனர். க்ருஷ்ணன் கம்ஸனின் வேலைக்காரியான கூனியை நிமிர்த் ததும் இராமன் கைகேயீயின் வேலைக்காரியான கூனியின்மீது சிறு பிராயத்தில் விற்கொண்டு மண் ணுண்டை எய்ததும் இங்கு அறியத் தக்கன. கண்ணபிரானுடைய சரித் திர பரமாகக் கொள்ளும்போது 'உண்டைவில் நிறத்தில்' என்பதை ஒரு சொல் வடிவமாகக் கொண்டு, சுண்டுவில்லை நிமிர்ப்பது போலே இலேசாகக் கூனிகூன் நிமிர்த்தபடி யைச் சொல்லிற்றாகிறது. நிறத்தில் என்றது அவ்விதமாக என்றபடி 'சுண்டு வில்லைத் தெறித்தாப் போலே அநாயாஸேன நிமிர்த்தாய்'' என்பது இருபத்தினாலாயிரத்தில் பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக் யானம்.

இனி, ஸ்ரீ ராமபிரானுடைய சரித்திரபரமாகக் கொள்ளும் பக்ஷத்தில் கூனே சிதைய—மந்தரையின் கூன் முன்னும் பின்னும் தள்ளுண்ணும்படியாக (நோவு அடையும்படியாக), உண்டைவில் – சுண்டு வில்லைக் கொண்டு நிறத்தில்—மர்மத்திலே, தெறித்தாய் — எய்தாய் என்று பொருள் கொள்க. இங்ஙனே இராமபிரானுடைய சரிதையைக் கூறுவதாகில், கோவிந்தா! என்ற விளி பொருந்தாதே; காகுத்தா! என்றல்லவோ விளிக்க வேண்டும் என்று சிலர் சங்கிக்கக் கூடும். இதற்கு இருவகையாக ஸமாதானம் உரைத்தனர் பூர்வர்கள். கோவிந்தா! என்றது பசுக்களை மேய்ப்பவன் என்ற பொருளில் இங்கு வந்ததன்று; வடமொழியில் பூமிக்கும் கோவென்று வாசகமுண்டாதலால், பூமிக்குரக்ஷகனானவே! என்கிறது. இஃது இராமபிரானுக்கும் விளியாகலாமென்பது முதல் ஸமாதானம்.

அன்றிக்கே, இராமபிரான் மேல் குறை கூற விரும்பாது, தீம்பு செய்வது க்ருஷ்ணனே என்று கொண்டு, "போம்பழியெல்லாம் அமணன் தலையோடே என்னுமா போலே" அவன் (க்ருஷ்ணன்) தலையிலே ஏறிட்டுச் சொல்லுதல் என்பது இரண்டாவது ஸமாதானம். அதாவது—"கூனே சிதையவுண்டைவில் நிறத்தில் தெறித்தாய்" என்று இராமபிரானுடைய சரிதையைச் சொல்லிவிட்டு, குணக்கடலாகிய இராமபிரான் இப்படிப்பட்ட ஒரு தீம்பு செய்ததாகச் சொல்லுவதற்குத் திருவுள்ளமில்லாமல் "பல்லாயிரவர் இவ்வூரில் பிள்ளைகள் தீமைகள் செய்வார், எல்லாம் உன் மேலன்றிப் போகாது" (பெரியாழ்வார் 2-8-5) என்கிறபடியே ஊர்ப்பட்ட தீம்புகளையெல்லாம் தனக்கே கொள்ளப் பிறந்த கண்ணபிரான் மேலே இந்தத் தீம்பையும் ஏறிட்டு விடலாமென்று ஆழ்வார் திருவுள்ளம் பற்றிப் போலும் கோவிந்தா! என்று ஸம்போதனம் பண்ணிற்று என்றபடி.

"போம்பழியெல்லாம் அமணன் தலைமேலே" என்ற ஸ்ரீ ஸூக்தியில் அடங்கிய வரலாறு வருமாறு. ஒரு கள்ளன் ப்ராஹ்மணனுடைய அன்றைக்குத்தான் சுவர் வைக்கப்பெற்ற புழைக்கடையிலே கன்னம் வைக்க, அது ஈரச் சுவராகையாலே இறுத்தியதனால் அக்கள்ளன் மாண்டு போக, அவ்வளவில் அவனது உறவினர் ப்ராஹ்மணனை, அவன் மாண்டதற்கு நஷ்ட ஈடு தர வேணுமென்று நிர்பத்திக்க, இரண்டு திறத்தாரும் நியாயாதிபதி பக்கல் செல்ல, அவ்வரசன் அவிவேகியும் மூர்க்கனுமாகையாலே, 'ப்ராஹ்மணா! நீ ஈரச் சுவர் வைக்கவேயன்றோ அவன் முடிந்தான். ஆகையால் நீயே நஷ்ட ஈடு தரவேண்டும்' என்று தீர்ப்பளித்தான். ப்ராஹ்மணனும் 'எனக்குத் தெரியாது, சுவர் வைத்த கூலியாளைக் கேட்க வேணும்' என்றான். அவனை அழைத்து அரசன் விசாரிக்க அவனும் 'தண்ணீர் விடுகிறவன் அதிகமாக விட்டிட்டான்; நான் என் செய்வேன்' என்றான். அவனை அழைத்துக் கேட்க, 'குயவன் பெரிய பானையைச் செய்தான், அதனால் நீர் அதிகமாயிற்று, நான் என் செய்வேன்?' என்றான். அரசன் குயவனை அழைத்துக் கேட்க, அவனும் 'என்னால் வந்ததன்று; நான் பானையைச் சிறிதாகவே செய்ய நினைத்தேன்; அது செய்து கொண்டிருக்கும்போது ஒரு தாஸி போக்குவரத்தாயிருந்தாள் அவளைப் பார்க்கிற பராக்கிலே பானை பருத்துவிட்டது, நானென் செய்வேன்?' என்றான். பிறகு தாஸியை அழைத்து விசாரிக்க, "வண்ணான் என் சேலையை விரைவில் கொணர்ந்து தாராமையாலே போக வரத்திரிந்தேன்' என்று அவள் கூற, வண்ணானை யழைத்துக் கேட்க, அவன் 'துறையில் கல்லிலே ஓர் அமணன் (திகம்பரசாமி) உட்கார்ந்திருந்தான், எவ்வளவு உரப்பியும் அவன் எழுந்து செல்லவில்லை; பிறகு அவனாகவே எழுந்து சென்ற பிறகு சேலையைத் தோய்த்துத் தர வேண்டியதாயிற்று; நான் என் செய்வேன்? அந்த அமணனே தாமதத்திற்குக் காரணம்' என்று கூற, அந்த அமணனைத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்து 'நீயன்றோ இத்தனையும் செய்தாய்; நீயே பழி தரவேணும்' என்று அரசன் கட்டளையிட, அவ்வமணன் மௌனச்சாமியாகையாலே ஒன்றும் விடை கூறாதிருக்க, 'உண்மையில் பழி தன்னிடத்திலுள்ளதனால் இவன்

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்தில்எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத்தில் மணியார்டர் எண்,செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

வாய் திறந்திலன்; இவனே குற்றவாளி' என்று அரசன் அவன் தலையை அரியக் கட்டளையிட்டானாம். அமணன் குற்றஞ் செய்யாதிருக்கவும் அவன் தலையில் அது ஏறினாற் போலே, கண்ணபிரான் தீம்பு செய்யாதிருந்தாலும் பிறருடைய தீம்பும் அவன் தலையில் ஏறுமென்று விநோதமாகக் காட்டினபடி.

**கண்ணன் நாமம் அஸஹ்யம்:**

உயிர்க்கது காலனென்று உம்மை
யானிரந்தேற்கு, நீர்
குயில் பைதல்காள் கண்ணன்நாமமே
குழறிக் கொன்றீர்
தயிர்ப்பழஞ்சோற் றொடு பாலடிசிலும்
தந்து, சொல்
பயிற்றிய நல்வள மூட்டினீர் பண்
புடையீரே

(திருவாய்மொழி 9-5-8)

என்பது பராங்குச நாயகியின் பரிதாபப் பேச்சு.

ஆழ்வார் தாம் வளர்த்த குயில்களுக்கு இராமநாமங்களையும் க்ருஷ்ண நாமங்களையும் கற்பித்து வைத்திருப்பதுண்டு; இராமநாமம் ம்ருதஸஞ்ஜீவனமாகையாலே, உயிர் தொலையும்படியாயிருக்கும் நிலைமையிலே இராமநாமங்களையே சொல்ல வேண்டும் என்றும், க்ருஷ்ண நாம ப்ரஸ்தாவமும் செய்யலாகாதென்றும் திட்டம் செய்திருந்ததுமுண்டு. இப்போது உயிர் தொலையுந்தருணமாகையாலே இராமநாமத்தையே சொல்லுங்கள், க்ருஷ்ண நாமத்தைச் சொல்ல வேண்டாவென்று விசேஷித்துக் கட்டளையிட்டிருந்தும் அவை க்ருஷ்ண நாமத்தையே சொல்ல 'படுகொலை' என்கிறாள் பராங்குச நாயகி. உங்களை வளர்த்து நான் செய்த உபகாரத்திற்கு இப்படி அபகாரம் பண்ணுகை நீதியோ? என்கிறாள்.

**பட்டரின் இராமபக்ஷபாதம்:**

கூரத்தாழ்வானின் திருக்குமாரரான பட்டருக்கு ஸ்ரீராமாவதாரத்திலே அளவற்ற பக்ஷபாத முண்டென்பது ப்ரஸித்தம். சிறியாத்தான் என்பவர் ஒரு நாள் பட்டரிடம் 'சக்ரவர்த்தித் திருமகனாருக்கு எல்லா ஏற்றமுமுண்டேயாகிலும் ஆச்ரிதர்களுக்காகக் கழுத்திலே ஓலை கட்டித் தூது போன ஏற்றமில்லையே' என்றாராம். அதை பட்டர் கேட்டருளி, 'ஓய்! குணக்கடலாகிய இராமபிரானுக்குத் தூது போதல் அநிஷ்டமன்று காணும்; அபிஷிக்த க்ஷத்ரிய குலத்திலே பிறந்தால் 'தூதுபோ' என்று ஏவ ஒருவருக்கும் நாஎழாதிறே' என்று அருளிச் செய்தாராம். அதற்கு மூலம் பின்வரும் பாசுரம் என்க.

முன்னோர் தூது வானரத்தின்
வாயில் மொழிந்து, அரக்கன்
மன்னூர் தன்னை வாளியினால்
உமாள முனிந்து, அவனே
பின்னோர் தூது ஆதிமன்னர்க்காகிப்
பெருநிலத்தார்
இன்னார் தூதனெனநின்றான் எவ்
வுள் கிடந்தானே.

(பெரிய திருமொழி 2-2-3)

'இன்னார் தூதனெனப்பட்டான்' என்னாமல் 'இன்னார் தூதனென நின்றான்' என்கையாலே பாண்டவ தூதன் என்று பெயர் பெற்ற பின்பு தான் எம்பெருமானுக்கு தரிப்பு உண்டாயிற்று என்பது விளங்கும்.

இங்கு பட்டரின் பின்வரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ ச்லோகம் அநுஸந்திக்கத் தக்கது.

यद्बृन्दावनपण्डितं दधिरवैर्यत्ताण्डवं शिक्षितं
यल्लक्ष्मीकरसौख्यसाक्षि जलजप्रस्पर्ध-
मानद्धि यत् ।
यद्भुक्तेष्वजलस्थलज्ञमपि यद्दूत्यप्रसङ्गोत्सुकं
तद्विष्णोः परमं पदं वहतु नः श्रीरङ्गिनो
मङ्गलम् ।। (१-१२४)

**यद्बृन्दावनपण्डितं** - ஸர்வஜ்ஞனுடைய திருவடியாகையாலே அத்திருவடி ஜடமன்றிக்கே பாண்டித்யம் பெற்றிருக்கிறதாம். ப்ருந்தாவன ஸஞ்சாரத்திலே பாண்டித்யமுடைய என்றபடி.

**दधिरवैर्यत्ताण्डवं शिक्षितं** - ஒருவரைப் பண்டிதரென்றால் 'இவர் சிக்ஷை பெற்ற இடம் எங்கே?' என்று கேள்வி பிறக்கும். அதற்கு ஸமாதானம் சொல்லுகிறாப் போலேயிருக்கிறது இந்த வாக்யம். ஆய்ச்சி தயிர் கடையும்போது அதனோசைக்கிணங்க கண்ணபிரான் நாட்டியமாடுவது வழக்கம்; ஆகவே தயிர் கடையும் ஓசைகளினால் சிக்ஷை செய்விக்கப் பெற்ற தாண்டவத்தையுடையது என்றதாயிற்று. ஸ்வாமி தேசிகன் கோபால விம்சதியில் (ச்லோகம் 4) **दध्ना निमन्थमुखरेण निबद्धतालं नाथस्य नन्द-भवने नवनीतनाटचम् ।।** என்றருளிச் செய்தது இங்கு ஸ்மரிக்கத்தகும். **दधिरवैः** என்ற பஹுவசந நிர்தேச ஸ்வாரஸ்யத்தால் இத்திருவடி பஹுச்ருதம் என்று காண்பிக்கப்பட்டது. **शिक्षितं** - அப்யாஸம் செய்விக்கப்பட்டதென்கை. இத்திருவடி பயின்ற தாண்டவத்திற்கு ஆசார்யன் தயிரோசை போலும்.

**यल्लक्ष्मीकरसौख्यसाक्षि** - வ்ருந்தாவனத்தில் ஸஞ்சரித்ததனாலும் தாண்டவம் பயின்றதனாலும் களைத்த திருவடியின் விடாய்தீரப் பிராட்டி தனது ஸுகுமாரமான திருக்கையினால் வருடுவதை அநுஸந்திக்கிறார் போலும். 'வடிவிணையில்லாமலர் மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி'யிறே. (திருவாய்மொழி 9-2-10). அப்படி பிராட்டி பிடிக்கும்போது அவளது கைகள் படுவதனாலுண்டாகும் இன்பத்தை அநுபவித்த திருவடிகளிறே இவை என்கிறார். தன்னைப் பிடிப்பதனாலே பிராட்டியின் திருக்கைகளுக்கு ஸௌக்யமளிக்க வல்ல திருவடி என்றும் சிலர் பொருள் கூறுவர்.

**यज्जलजप्रस्पर्धमानद्धि** - ஸஹஜமான காந்தி, குளிர்ச்சி, பரிமளம், ஸௌகுமார்யம் முதலிய குணங்களில் தாமரைப் பூவை வென்றிருக்கிற திருவடியென்கை. **स्पर्धमान** என்றது சண்டை

(33-ஆம் பக்கம் பார்க்க)



# நம்மாழ்வார்

ஸ்ரீ:உப.வித்துவான், வங்கிபுரம் நவநீதம் ஸ்ரீராம தேசிகாசார்ய ஸ்வாமி
ஒப்பிலியப்பன் ஸந்நிதி

**முன்னுரை**

சோதி நன்னாட்டில் திருமாமணி மண்டபத்தில் பெரிய பிராட்டியுடன் நித்ய ஸூரிகளாலும் முக்தர்களாலும் பரிபூர்ணமாய் அனுபவிக்கப்பட்டு எவ்வித கவலையுமின்றி வாழும் ஸர்வேச்வரனுக்கும் ஒரு கவலையுண்டு. தங்கள் தீவினையால் ஸம்ஸாரக் கடலுள் ஆழ்ந்து மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து அல்லல்படும் சேதநவர்க்கத்திற்கு நல்வழிகாட்டி உய்யும்படி செய்வித்தாக வேண்டுமே என்பதுவே அந்தக் கவலை. பல அவதாரங்களைச் செய்து பல் வழிகளில் முயன்றும் தனது எண்ணம் நிறைவேருமற் போகவே ஆழ்வார்களை அவதரிப்பித்து அருமையான அருளிச் செயல்களை அவர்கள் முகமாகத் தோற்றுவித்து நாட்டுக்கு நல்வழிகாட்ட எண்ணினான். அத்தகைய ஆழ்வார்களின் நடுவே நம்மாழ்வாரின் அவதாரம் ஓர் அற்புதச் சம்பவமாகும். மற்றைய ஆழ்வார்களைத் தமக்கு அவயவங்களாகக் கொண்டு தாம் தலைமையாய் நிற்பவரென்னும் படி ஒரு சிறந்த அவதாரம் நம்மாழ்வாருடையது.

**குருகூரின் பெருமை**

பாண்டிய நாடு கல்விவளம் மிக:' பெற்றது. இந்நாட்டில் 18 திவ்யத் தலங்கள் உள்ளன. இங்குப் பெருகும் பொருநையாறு எனப்படும் தாம்ரபர்ணி நதியைக் கங்கை-யமுனை-கோதாவரி என்னும் மூன்று புண்ணிய நதிகளிலும் சிறந்த தென்பர் பெரியோர். இதன் கரையில் திருக்குருகூர் என்னும் ஒரு புண்ணிய ஸ்தலம் உள்ளது. இத்தலத்தில் மிகப்பெரியோர் பலர் வாழ்ந்து வந்தனர். அவர்கள் தம்பக்தி மிகுதியால் எம்பெருமானைக் கண்கூடாகக் காணும் வாய்ப்பையும் பெறுவதாகப் புராணம் கூறும். இவ்வூர்த்திருவீதியில் எறிந்த இலைகளிலுள்ள எச்சிலையுண்ட நாயும் நற்கதி பெற்றதாக ஓர் ஐதிஹ்யம் உண்டு. இத்தலத்தில் வாழும் நான்கு வருணத்தினரும் தத்தம் கடமையைத் தவருது செய்து வாழ்பவர். நான்காம் வருணத்தினர் பலர் பாகவதர்களான பக்தர்களுக்குத் தொண்டு புரிந்து தாமும் எம்பெருமானை யன்றி வேறு தெய்வத்தையோ பலனையோ நாடாத பரமைகாந்தி

களாய் விளங்கினர்.

## வேளாளர் குலப்பெருமை

எம்பெருமானுடைய திருவடியினின்று நான்காம் வருணம் தோன்றியதாக மறைகூறும். இவ்வாறு அவன் திருவடி ஸம்பந்தம் பெற்ற வேளாளர் குலத்தின் பெருமையை வெளியிடவே அந்தக் குலத்தில் ஆழ்வார் அவதரித்ததாக ஸ்ரீ தேசிகன் அருளிச் செய்தார்.

## ஆழ்வாரின் குலப்பெருமை

இவ்வாறு சிறப்புற்று விளங்கிய வேளாளர் குலத்தில் திருவழுதி நாடர் என்ற பரமபாகவதர் ஒருவர் இருந்தார். நற்பண்பையும் பகவத் பக்தியையும் சீரிய ஒழுக்கத்தையும் கொண்ட அவரை மற்ற வருணத்தோரும் மிகப் போற்றி வந்தனர். அவர் வழியில் ஐந்தாமவராகத் தோன்றியவர் பொற்காரியார் என்பவர். அவரது தவப் புதல்வராய்ப் பிறந்தவர் காரியார். அவர் இளமையிலேயே தம் மூதாதையரினும் விஞ்சிய நிஷ்டையுடையராய்ப் பகவானிடம் பேரன்பு கொண்டு திகழ்ந்தார். நாளடைவில் மணம் புரியும் பருவமெய்தினார். பொற்காரியார்க்குத் தம் தகுதிக்கேற்ற மருமகள் வாய்க்க வேண்டுமே என்ற பெருங்கவலை. அவர் மலை நாட்டில் திருவண்பரிசாரமென்னும் புண்ணியத் தலத்தில் திருவாழ்மார்பர் என்னும் பாகவதோத்தமர் ஒருவர் இருப்பதாகவும் அவருக்கு ஒரு புதல்வி மணப்பருவத்தை அடைந்துள்ளதாகவும் கேள்வியுற்றார். உடனே பொற்காரியார் திருவண்பரிசாரத்துக்குச் சென்று எம்பெருமானைத் தொழுது திருவாழ்மார்பரது இல்லத்துக்குச் சென்றார். அவரால் பெருமதிப்புடன் உபசரிக்கப்பெற்று அவர் குணங்களில் மிக ஈடுபட்டு அவர் புதல்வியைத் தம் புதல்வரான காரியாருக்குத் தருமாறு கேட்டார். திருவாழ்மார்பரும் உடையநங்கையென்னும் தம் புதல்விக்கு ஏற்ற மணமகனை அளித்ததற்கு எம்பெருமானை வணங்கித் தமது இசைவைத் தெரிவித்தார். பின் மிகச் சிறப்பாய் விவாக மங்களம் நிறைவேறியது.

## ஆழ்வாரின் பெற்றோர்கள்

காரியாரும் உடையநங்கையும் மனமொத்துத் திருக்குருகூரில் இல்லறம் நடத்தினர். நற்குலத்துதித்த உடையநங்கை ஸத்துவ குணம் நிறையப் பெற்றவளாய் பகவத் பக்திநிரம்பிய காரியார் தனக்கு வாழ்க்கைத் துணைவராய் வாய்த்தது பற்றி எல்லையற்ற உவகை கொண்டாள். கற்புடை நற்பெண்டிற்குச் சாஸ்த்திரம் விதித்த கட்டளையிலே தன் கணவரையே முதற் தெய்வமாகப் போற்றிப் பணிவிடை செய்து மகிழ்வித்தாள். அத்தலத்து எம்பெருமானாகிய பொலிந்துநின்ற பிரானையும் தன் கணவருடன் சேர்ந்து வழிபட்டுக் கணவரின் மதிப்புக்கு உரியவளாய் வாழ்ந்தாள். இவ்வாறு சிலகாலம் கழிய, உடைய நங்கை தன் கணவருடன் பிறந்தகம் சென்று சிலநாள் இருந்தாள். அப்போதும் அவ்வெம்பெருமானைத் தினந்தோறும் ஸேவிக்கத் தவறியதில்லை. வழிவழியாக திருமாலை வழிபடும் பாகவத குலத்திலன்றோ அவள் பிறந்தாள்!

## குறுங்குடிநம்பியின் அநுக்ரஹம்

பின் அவ்விருவரும் தமது உறைவிடமாகிய திருக்குருகூருக்குத் திரும்புகையில் திருக்குருங்குடி வழியாக வர நேர்ந்தது. அப்பொழுது இருவரும் அங்கு நம்பி ஸந்நிதிக்குச் சென்று அப்பெருமானைச் சேவித்துத் தமக்குப் புத்திரப் பேற்றை அருளுமாறு பிரார்த்தித்தனர். பாகவதோத்தமர்களான அவர்களின் விருப்பத்தைத் தலைக்கட்டுவது தன் தலையாய கடமை எனக் கருதினான் குறுங்குடி நம்பி; உலகத்தை உய்விக்கத் தான் ஸங்கல்பித்த ஓர் அருஞ்செயலுக்கு அவர்களை வாயிலாக்கத் திருவுள்ளங்கொண்டான். அவர்களை நோக்கி தானே அவர்களுக்குப் புதல்வனாய்ப் பிறப்பதாக அர்ச்சகர் வாயினாற் கூறினான். அவர்கள் கொண்ட மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையுண்டோ. நம்பி திருவடி வணங்கி இருவரும் தமது ஊருக்குப் புறப்பட்டனர். திருக்குருகூர் சேர்ந்து மனநிறைவுடன் எம்பெருமானுக்கு கைங்கரியம் புரிந்துகொண்டு நல்வாழ்க்கை நடத்திவந்தனர்.

## ஆழ்வாரின் அவதாரம்

எம்பெருமான் தன்னுடையவும் தன்திருமார்பில் விளங்கும் கௌஸ்துபரத்னத்தினுடையவும் ஸேனைத் தலைவரான விஷ்வக்ஸேநருடையவும் அம்சமான ஒரு மஹாபுருஷரை அவதரிப்பித்து உலகை வாழ்விக்க ஏற்ற காலம் வாய்த்

தமென உணர்ந்தான். அவருக்குப் பெற்றோராகும் பெரும் பேற்றினைக் காரியார் - உடையநங்கை ஆகிய இருவருக்கும் அளித்தான். சிலநாளில் உடையநங்கை கர்ப்பம் தரித்தாள். தம்பதிகள் எம்பெருமான் திருவருள் புரிந்ததற்கு மகிழ்ந்தனர். ஒரு மஹாதேஜஸ் வயிற்றினுள் வளர்வதால் உடையநங்கையின் மேனி அற்புதமான ஒளிவீசப்பெற்றது. ப்ரஸவ காலம் அணுகியது. கலியுகம் தொடங்கியது. கலியுகத்தின் ஆற்றலை ஒழிக்கவல்ல இந்த அவதாரத்தைக் கலியுகத்தின் தொடக்கத்திலேயே செய்விக்க எம்பெருமான் திருவுள்ளம் கொண்டனன் போலும். கலியுகம் பிறந்து நாற்பத்துமூன்ரும் நாள்; வைகாசி மாதம் - விசாக நக்ஷத்ரம். இந்நன்னாளில் உடையநங்கை திருவயிற்றினின்று ஒரு திவ்ய தேஜஸ் உதயமாயிற்று. அதியற்புதமான சோதி வடிவமாய்த் தெய்விகத் தன்மை விளங்கப் பிறந்த ஆண் குழந்தையைக் கண்ட பெற்றோர் மகிழ்ச்சி கூறுந்தரமன்று. உலகில் எத்தனையோ பெற்றோர்கள் இருக்கின்றனரே அவர்களுக்கெல்லாம் இப் பேறு கிட்டியதா? இதுதான் முற்பிறவியில் செய்த மஹாஸுக்ருதத்திற்கேற்ற எம்பெருமானுடைய ஸங்கல்பம் என்பது.

## அவதாரகாலச் சிறப்பு

இவ்வவதார காலத்தில் அறிஞர்களின்உள்ளமெல்லாம் குளிர்ந்தனவாம். திசைகளெல்லாம் தெளிவு பெற்றனவாம் நன்மணத்துடன் காற்று எங்கும் வீசியதாம். நித்யஸூரிகளும் பூமாரி பொழிந்தனராம். எம்பெருமானும் ஒரு பேரருஞ் செயலாற்றிய மன நிறைவைப் பெற்றுன்; இந்தத் தெய்விகக் குழந்தைக்கு உலக முறையில் வெயில் மழை முதலியவைகளால் துன்பம் வராதிருக்கத் தன் திருப் பள்ளியாகிய திருவனந்தாழ்வானைத் திருக்குருகூரில் ஒரு புளிய மரமாக வடிவு கொள்ளுமாறு முன்பே நியமித்திருந்தான். அவ்வாறே ஆதிசேஷன் ஆழ்வார் அவதரிப்பதற்கு முன்பே தனது அமசத்தைக் கொண்டு திருப் புளியாழ்வாராக ஆகி வளர்ந்து வந்தார்.

## குழந்தையின் விசித்திர நிலை

குழந்தை பிறந்ததும் காரியார் தம் வருணத்திற்கு உரிய முறையில் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்தார். ஆனால் பெற்றோர்களுக்கு ஒரு மனக்கவலை ஏற்பட்டது. குழந்தை தாய்பாலைப் பருகுவதேயில்லை. வேறு உணவும் கொள்வதில்லை; அழுவதில்லை; கைக் குழந்தைக்கு அழுதல் வலிமைதருமென்று ஒரு பழமொழி. பெற்றோர்கள் பற்பல உபாயங்களைச் செய்து பார்த்தனர். பெயரிடும் நாள் வந்தது. இக்குழந்தை உலகில் பிறக்கும் குழந்தைகளின் இயல்புக்கு மாறுபட்ட நிலையில் இருந்ததால் 'மாறன்' எனத்திருநாமமிட்டனர். உணவின்றியிருந்தும் குழந்தையின் மேனி சிறிதும் வாட்டமின்றியிருந்ததைக் கண்டு பெற்றோர்கள் சற்று மனவமைதியும் பெற்றனர். அவர்கள் பகவத் பக்தி விஞ்சியவர்களாதலின் எல்லாம் அவனது ஸங்கல்பமெனத் துணிந்தனர்; பிறந்து பன்னிரண்டாம் நாள் குழந்தையை எம்பெருமான் ஸந்நிதிக்குக் கொண்டுபோய் அவன் திருமுன்பே விட்டனர்; அவன் கடாக்ஷம் குழந்தைமீது விழ வேண்டுமென விரும்பினர். அருகேயுள்ள திருப்புளியாழ்வாரடியில் தொட்டிலிட்டு அதில் பள்ளி கொள்ளச் செய்தனர்; அங்கேயே வளர்கத்தொடங்கினர். குழந்தை வளருகின்றது. பேசும் பருவம் வந்தும் பயனில்லை. மௌன நிலையே தான். உண்மை நிலையை எவ்வாறு அறிய முடியும்? உலக முழுவதும் நல்வாழ்வு பெறுதற்கு எம்பெருமான் ஸங்கல்பித்த அற்புதமான ஓர் அவதார விசேஷம் இது என்று கண்டனரா? அவர்கள் எம்பெருமானிடம் தாங்கள் செய்த மஹாபசாரத்தின் விளைவே இக் குழந்தைக்கு உள்ள இந்நிலையென்று நினைத்தனர். உலகில் கர்ப்பத்தினின்று பிறக்கும் உயிர்களுக்கு முற்பிறவியின் நினைவு சிறிதும் இன்றிச் சடமென்னும் வாயு மறைத்துவிடுகின்றதன்றே! இக்குழந்தையோ தனது அவதாரப் பெருமையால் அந்தச் சடவாயுவின் வலிமையை ஒழித்து விசேஷ ஜ்ஞாநம் குன்றாது விளங்கியப்படியால் பின் சடாரி-சடகோபன் என்றெல்லாம் திருநாமம் பெற்றது. எம்பெருமானைத் தியானித்தலையே உணவாகக் கொண்டு குழந்தை வளர்ந்து வந்தது.

## ஸ்ரீவிஷ்வக்ஸேநர் அநுக்ரஹம்

இந்நிலையில் பெற்றோர்கள்

உணராத பரம ரஹஸ்யமான ஒரு சம்பவம் நடந்தது. ஸ்ரீ வைகுண்டத்தில் எம்பெருமான் ஸேனை முதலியாரை நிலவுலகிற் சென்று அவருடைய அம்சமும் கலந்து தோன்றிய இக் குழந்தைக்குத் திருவிலச்சினை (திருவாழி திருச்சங்கு) அருளி மந்திரார்த்தங்களை உபதேசிக்குமாறு நியமித்தான். அவரும் அவ்வாறே வந்து குழந்தைக்கு அநுக்ரஹம் செய்து எழுந்தருளினார். எம்பெருமான் கானும் விசேஷ கடாக்ஷம் செய்தருளி 'நம் ஆழ்வார்' என்று அபிமானித்தபடியால் நம்மாழ்வார் என்றே திருநாமம் வழங்கலாயிற்று. நாளடைவில் பெற்றோர்கள் தம் புதல்வரின் நிலை தமது அறிவுக்கு எட்டாத பகவத் ஸங்கல்பத்தால் வந்ததெனக் கருதி ஒருவாறு மனச் சாந்தி பெற்று தம்வழியே சென்றனர். பருவத்துக்கு ஏற்றவாறு ஆழ்வார் திருமேனியும் வளர்ச்சி பெறுகின்றது. பதினாறு பிராயம் நிரம்பியும் ஆழ்வார் எந்நாளும் உறங்காத அற்புதப் புளிய மரத்தின் அடியிலேயே பதுமாசனமிட்டு ஜ்ஞானமுத்திரையுடன் அமர்ந்து பரமபுருஷனைத் தியானித்துக் கொண்டு அநுபவத்தில் மண்டியிருந்தார். (இவ்வமயத்தில் ஸ்ரீமதுர கவிகள் வந்து ஆழ்வார் திருவடிகளைச் சேர்ந்து ஆசார்யராகப் பற்றிய வரலாற்றை அவரது வைபவத்தில் காண்க.)

### பகவந்மூர்த்திகள் காட்சிதருதல்

ஸ்ரீவைகுண்ட நாதனுக்குத் தானே நிலவுலகுக்குச் சென்று ஆழ்வாரைக் குளிரக் கடாக்ஷித்து வரவேண்டுமென்று விருப்பம் உண்டாகியது. அவன் பெரிய திருவடியின் மீது அமர்ந்து திருக்குருகூருக்கு எழுந்தருளி நம்மாழ்வார் திருமுன்பே காட்சி தந்தான். அவ்வாறே இவ்வுலகில் மற்றையத் தலங்களில் திருக்கோயில் கொண்டுள்ள மூர்த்திகளும் அர்ச்சா ஸமாதியைக் கடந்து வந்து ஆழ்வாருக்குக் காட்சியளித்துப் பெருமை பெற விரும்பி வந்து ஸேவை தந்தனர். ஆழ்வார் கண்ணுரக் கண்டார்; களிக்கடலுள் மூழ்கினார்; கண்ணீர் பெருக்கினார்; மனமுருக நின்றார்; திருமேனி முழுதும் புளகமெய்தப்பெற்றார். அவ்வநுபவத்திலேயே மண்டியிருந்தார். ஸகல சாஸ்த்ரங்களும் ஸகல வேத வேதாந்தங்களும் அவர் எதிரே வந்து நின்றன. இங்ஙனம் ஸ்ரீ வைகுண்ட நாதனும் மற்ற அர்ச்சாவதார மூர்த்திகளும் நேரில் எழுந்தருளிக் காட்சி கொடுக்கப் பெற்ற ஆழ்வாரை நித்ய ஸூரிகளும் ச்வேதத்வீபத்தில் வாழும் சுத்தயாஜிகளான மஹர்ஷிகளும் திரள் திரளாக வந்து ஸேவித்துக் களிப்புற்றனர்.

### பிரபந்தங்களைக் காண்டல்

எல்லாவற்றுக்கும் மூலப்ரமாணமாயுள்ள வேத வேதாந்தங்களின் ஸாரார்த்தங்களை எல்லா வருணத்தினரும் கற்றுணரப் பாங்காகக் தமிழ் மொழியில் பிரபந்தமாக ஆழ்வார் திருவாயினால் தோற்றுவிக்க எம்பெருமானுக்கு உள்ள மனோரதம் இப்பொழுது நிறைவேறுகின்றது. பகவதநுபவத்திலேயே மண்டியிருந்த ஆழ்வாரின் திருவாயினின்று அவ்வநுபவத்துக்குப் போக்குவீடாகத் திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு பிரபந்தங்கள் நான்கு வேதங்களின் ஸாரமாக அவதரித்தன. இவை சேதநர் அவசியம் அறிய வேண்டிய அர்த்தபஞ்சகம் - த்வயத்தின் அர்த்தம் முதலிய ஸகல வேதாந்த ஸாரார்த்தங்களையும் தம்முள் பொதிந்து கொண்டு விளங்குவன. இந்த மஹோபகாரத்தை உலகுக்குச் செய்தருளிய ஆழ்வாருக்கு இத்தலத்து எம்பெருமான் தான் சூடிய மகிழமாலையை மிக்க மகிழ்ச்சியுடன் அருளப்பாடிட்டு அருளினான். இதனால் 'வகுளபூஷணர்' 'வகுளாபரணர்' என்று வழங்கப் பெற்றார் ஆழ்வார். இவர் தம் ஸ்ரீஸூக்திகளில் பிறமதத்தின் விபரீதக் கொள்கைகளைக் கண்டித்தொழிந்தார். இங்ஙனம் யானைகள் போன்ற பிற மதத்தினருக்கு மாவட்டி போல் நின்று அவர் மதத்தை அடக்கியபடியால் 'பராங்குசர்' என்னும் திருநாமம் வந்தது. இவ்வாறு நாட்டுக்கு உய்யும் வழிகாட்டி அவதார காரியத்தைத் தலைகாட்டி உலகப் போக்குக்கு சிறிதும் இடமாயின்றி முப்பத்தைந்து ஆண்டுகளைத் திருப்புளியாழ்வாரின் அடியிலேயே கழித்துத் தமதிடமாகிய சோதி நாட்டுக்கு எழுந்தருளினார்.

### ஸ்ரீசடாரியின் பெருமை

திவ்ய தம்பதிகளின் திருவடிக்கீழ் அமர்ந்து புகுந்ததாக ஆழ்வார் தாமே பாசுர மிட்டருளிய படியாலும் திருமா

லடியார்களில் இவரே முதல்வ ராதலாலும் எம்பெருமானுடைய திருவடி நிலையை 'ஸ்ரீ சடாரி' என்று இவர் திருநாமமிட்டே தொன்று தொட்டு வழங்கலாயினர். 'த்ரமிடோபநிஷத்' எனப்படும் ஸ்ரீ ஸூக்தியை அத்யயநம் செய்யாதவர்களிடம் திவ்ய தம்பதிகளுக்கு அன்பு ஏற்படாதாம். அதற்காக ஆழ்வார் தாமே எம்பெருமான் திருப்பாதுகத்தினுட் புகுந்து ஸ்ரீசடாரி வடிவங்கொண்டு அத்தகையவர் முடியிலே எழுந்தருளி அவர்களிடம் எம்பெருமானுக்குப் பரிவு உண்டாகுமாறு செய்கின்றாராம். இக்கருத்தை ஸ்ரீதேசிகன் தாமே விளக்கியுள்ளார்.

பிரபந்தங்களின் விளக்கம்

இவ்வாழ்வார் அருளிய பிரபந்தங்கள் நான்கும் அந்தாதித் தொடர்பாக அமைந்தவை. அவை நான்கையும் பற்றிச் சிறிது விளக்கம் தரப்படுகின்றது:-

(1) திருவிருத்தம்: இது கட்டளைக் கலித்துறையில் அமைந்த நூறு பாசுரம் கொண்டதாகும். விருத்தம் என்னும் சொல் செய்தியென்னும் பொருள் கொண்ட வ்ருத்தம் என்ற வடமொழிச் சொல்லின் திரிபாகும். திரு என்பது அதன் பெருமையைக் காட்டும் அடைமொழியாகும். ஆழ்வார் இப்பிரபந்தத்தில் எம்பெருமானிடம் இந்நிலவுலகில் இருப்பு, தமக்கு மிகவும் பொறுக்கமுடியாதிருக்கும் செய்தியை விண்ணப்பித்துத் தம் ஸம்ஸாரபந்தத்தைப் போக்கியருளும்படி பிரார்த்திக்கின்றார். இப்பிரபந்தத்தில் முதலும் இறுதியும் தவிர மற்றைப் பாசுரங்களெல்லாம் ஸர்வாங்க ஸுந்தரனான எம்பெருமானாகிய நாயகனிடம் ஆழ்வார் பெண்தன்மை பெற்றுப் பேசுவனவாகும். இதன் முதற் பாசுரத்திலேயே அர்த்த பஞ்சகமும் சேஷ சேஷிபாவ ஸம்பந்தமும் கூறப்படுவனவாகவும் எம்பெருமான் தானே தோற்றுவிக்க, தம் திருவாயினாற் செய்யும் விண்ணப்பமாகத் தோன்றும் நான்கு பிரபந்தங்களையும் திருச்செவிசாற்றி இவற்றை எல்லா அடியார்களும் அநுபவிக்குமாறு செய்தருள வேண்டுமென்று பிரார்த்திப்பதாகவும் ஆசார்ய ஸார்வ பௌமரான ஸ்ரீதேசிகனது நிர்வாஹம்.

(2) திருவாசிரியம்:- இது ஏழு ஆசிரியப் பாக்களால் அமைந்தது. முதற்பிரபந்தத்தில் ஆழ்வார் தம் ஸம்ஸார பந்தத்தை நீக்கித் திருநாட்டையருளுமாறு பிரார்த்தித்தார். அவ்வாறு செய்தால் மற்ற பிரபந்தங்கள் அவதரிக்க வாய்ப்பு இராதே! அதற்காக எம்பெருமான் ஒரு யுக்தி கண்டான். ஆழ்வார் திருநாட்டுக்கு எழுந்தருளப் பாரிப்பது தன்னைப் பரிபூரணமாக அநுபவிப்பதற்குத்தானே என்றும், அந்த அநுபவத்தை இங்கேயே அளித்துவிட்டால் மனந்தேறிப் பிரபந்தங்களை வெளியிடலாகுமென்றும் கருதினான். ஆழ்வாருக்குத் தன் திருமேனி ஸ்வரூபம் குணம் முதலியவற்றை நன்கு காட்டியருளினான். அவற்றை ஸேவித்த ஆழ்வார் மிக மகிழ்ந்து தாம் பரமபதத்தில் பெற வேண்டிய அநுபவத்தை இங்கேயே பெற்றுவிட்ட பெருமையை இப்பிரபந்தத்தில் சுருக்கமாக அருளிச் செய்தார்.

(3) பெரியதிருவந்தாதி- இது வெண்பாவில் அமைந்த எண்பத்தேழு பாசுரங்கள் கொண்டது. இதில், தாம் பெற்ற பகவதநுபவத்தில் ஆசை மேன்மேலும் கட்டுக்கு அடங்காமல் வளர்ந்து அநுபவத்தை முழுதும் பெற ஆழ்வார் தம் நெஞ்சை அழைத்துத் தம்முடன் பகவதநுபவத்தில் ஒத்துழைக்குமாறு வேண்டி இறுதியிலும் நெஞ்சுக்கு நல்லுபதேசம் செய்து பிரபந்தத்தைத் தலைக்கட்டியருளினார்.

(4) திருவாய்மொழி:- பல்வகைப்பாக்களாலும் பாவினங்களாலும் அமைந்த 1102 பாசுரங்கள் கொண்டது. ஆழ்வார் எம்பெருமானைத் தம் விருப்பத்தின்படி அநுபவித்துத் தமது இடமாகிய ஸ்ரீ வைகுண்டத்திற்குத் திருப்பி எழுந்தருளியதை விளக்குவது இப்பிரபந்தம்.

### திருவாய்மொழியின் தனிப்பெருமை

இப்பிரபந்தமே ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தமென வழங்கும் ஸ்ரீ விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் ஸாரார்த்தங்களை உலகில் எல்லா வருணத்தினரும் நன்கு உணர்ந்து உய்ய வழிகாட்டியதாகும். இப்பிரபந்தம் ஆழ்வார் தாமாக முயற்சியுடன் இயற்றியதன்று. ஸர்வேசுவரனை இடைவிடாது அநுபவித்து அவ்வநுபவம் உள்ளடங்கமாட்டாது இப்பிரபந்தமாக வடிவு கொண்டதென்பது ஆசார்யர்களின் துணிபு. இருபத்துநான்கு பிரபந்தங்கள் கொண்ட நாலாயிரத்

தினுள் இது ஒப்பற்ற பெருமை கொண்டு திகழ்வதாகும். சேதநர் உஜ்ஜீவிப்பதற்கு அவசியம் அறிந்து கொள்ள வேண்டிய அம்சங்களுள் ஒன்றையும் விடாது அனைத்தையும் தன்னுள் கொண்டது இப்பிரபந்தம். சரீரத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஜீவாத்மா - அவனுக்குத் தலைவனான பரமாத்மா-அவன் திருவுள்ளம் உகக்கச் செய்யும் உபாயமான சரணாகதி-அவனருளாலே மோக்ஷம் பெறுதல் - அவனிடம் அபதாரப்பட்டதால் ஸம்ஸார தாபத்தில் அகப்பட்டுத் தவித்தல் - அடியார்களின் பெருமை, அவர்களை வழிபட்டு உள்ளக்கலக்கம் நீங்கப் பெறுதல் ஆகிய அமசங்களின் ஸாரமான அனைத்தையும் ஆழ்வார் கருணையுடன் தம் பிரபந்தத்தில் அருளிச் செய்தாரென ஸ்ரீதேசிகன் போற்றுகின்றார்.

### ஸ்ரீநாதமுனிகள் ஆச்சரயித்தல்

ஆசார்ய பரம்பரையில் நம்மாழ்வாருக்கு அடுத்தவரான ஸ்ரீநாதமுனிகள் திருவாய்மொழியைப் பெறுவதற்காகக் கடுந்தவம் கிடந்தார். அவருக்காக ஆழ்வார் மறுபடியும் எழுந்தருளி அவருக்கு மந்த்ரார்த்தங்களையும் திருவாய்மொழியுடன் மூவாயிரத்தையும் உபதேசித்து அவருக்கு முக்கிய ஆசார்யரானார். நாதமுனிகளும் ஆழ்வார் திருவடிகளையே தஞ்சமாகக் கொண்டு அவர் ஸூக்தியை இசையுடனும் தாளத்துடனும் சீடர்க்கு உபதேசித்து வந்தார்.

### ஆளவந்தாரின் ஈடுபாடு

ஸ்ரீநாதமுனிகளுக்குப் பின் அவர்திருப்பேரனாரான ஆளவந்தாரும் ஆழ்வார் திருவடிகளையே தமக்கு உற்ற தெய்வமாகக்கொண்டு இன்னும் சீரிய முறையிலே போற்றினார். இவர் அருளிய ஸ்தோத்ர ரத்நத்தில் முதல் மூன்று சுலோகங்களால் தம்பாட்டனாரும் தம் ப்ராச்சார்யானுக்கு ஆசார்யனுமாகிய ஸ்ரீநாதமுனிகளைப் போற்றினார். பின் கிரந்தங்களை இயற்றி ஸித்தாந்தத்திற்குப் பேருதவி செய்த ஆச்சார்யர்களைத் துதிக்கத் தொடங்குவதாய்க் கூறி முதலில் ஸ்ரீவிஷ்ணு புராணத்தை அருளிய ஸ்ரீபராசர மஹர்ஷியை ஒரு சுலோகத்தால் துதித்தார். வ்யாஸ பகவான் முதலியவர்களை விட்டுப் பராசரரை மட்டும் துதிப்பதற்குக் காரணம் சேதநர்கள் பெற வேண்டிய தத்துவ ஞானத்தை விரிவாய்த்தரவல்ல நூலை இயற்றிய பெருமை இவரைப் போல மற்ற மஹர்ஷிகளுக்கு இல்லையென்பதுவே என்ற கருத்து அதன் பாஷ்யத்தில் விரிவாய்க் கூறப்பட்டுள்ளது. இதற்கு அடுத்த சுலோகம் நாம் தினந்தோறும் அநுஸந்தித்துவரும் 'மாதாபிதா' என்ற ஆழ்வாரைப் பற்றிய சுலோகமே. இதற்குப் பிறகு வேறு ஒரு ஆசார்யனுக்கும் சுலோகம் இடமில்லை. ஆளவந்தாருடைய உட்கருத்தை தமது ஞானக்கண்ணால் கண்ட ஸர்வஜ்ஞரான நம் தேசிகன் அதை இந்தச் சுலோகத்தில் பாஷ்யத்தால் படம் பிடித்து நமக்குக் காட்டுகின்றார். வேதாந்தார்த்தங்களின் ரஹஸ்யங்களை மிகமிகத் தெளிவு படுத்துவதில் ஸ்ரீவிஷ்ணு புராணத்தையும் விஞ்சிய பெருமை பெற்றுவிட்டதாம் ஆழ்வாருடைய திருவாய்மொழி. மேலும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியை அநுசந்தித்தவுடன் எம்பெருமான் திருவுள்ளம் மிக மிகத் தேனூறித் தித்திக்குமாம். இப்பிரபந்தத்தைச் செவியிற் கொள்வார்க்கும் உடனே எம்பெருமானிடம் மிகுந்த ஈடுபாடு உண்டாகின்றதாம். மேலும் இது எல்லா வருணத்தாருக்கும் ஓதி உய்யப் பாங்காயுள்ளது. இத்தகைய ஸூக்தியைக் கண்டு உலகிற்கு வெளியிட்டு பேருதவி புரிந்ததை உள்ளத்துக் கொண்டு ஆழ்வாரைப் புகழ்கின்றார் ஆளவந்தார். மேலும் ஆழ்வார் தமது அவதார காரியத்தைத் தலைக்கட்டித் திருநாடு சேர்ந்தபின்பும் நெடுங்காலம் கழித்து எம்பெருமானது ஸங்கல்பத்தால் ஒரு கால் நேரில் மறுபடி தோன்றித் தம்பாட்டனாரான நாதமுனிகளுக்கு ஸகல உபநிஷத்துக்களின் ஸாரமான எல்லாப் பிரபந்தங்களையுமே தம் திருவாயினால் உபதேசித்த பெருமையையும் நினைத்து ஆளவந்தார் மனமுருகுகின்றார். தாய்-தந்தை-பெண்டிர்-புதல்வர் முதலிய எல்லா உறவினரும், எம்பெருமானே. என்று உபநிடதம் கூறும். இந்தக் கொள்கையை ஆழ்வார் விஷயத்தில் கொள்கின்றார் ஆளவந்தார். எல்லா உறவினரும் தமக்கு ஆழ்வார் திருவடிகளே என்று பேசி வேறொன்றும் தமக்கு வேண்டியதில்லை எனப் பெருமிதங்கொள்கிறார். இந்தக் கொள்கை இந்நிலவுலகில் மட்டுமோ! மோக்ஷத்திலும் என்கிறார்; ஆழ்வாரைத் தம்குலத்துக்குத் தலைவர் என்று பேசிப்

பின் நாதமுனிகளின் ஸம்ப்ரதாயத்தைச் சார்ந்த அனைவருக்குமே குலபதி என்கிறூர். உபநிஷத்து காட்டிய முன்னோர்களின் அநுஷ்டாநத்திலும் வந்துள்ள ப்ரபத்தியை ஆழ்வார் தாமும் அநுஷ்டித்து உலகுக்கும் தெளிவாய்க் காட்டி உபதேசித்ததாலன்றோ ப்ரபந்த ஸந்தாந கூடஸ்தரென அவரைப் போற்றுகின்றோம். பரதத்துவம் இன்னதென்று நிர்ணயிக்கப் பாங்கான ஆழ்வார் ஸூக்தியிலும் அவர் சூடிய மகிழ் மலரின் மணம் வீசுகின்றதாம். அவர் திருவடிகளில் அந்த மணம் கமழ்தலைக் கூறவும் வேண்டுமோ என்கிறூர். ஸ்ரீவைஷ்ணவ ஸாம்ராஜ்யத்தில் முடிசூடியதன் சின்னங்களால் பெருமையுற்ற அத்திருவடிகளை அடையவர்களும் வைஷ்ணவ அரசாட்சியுரிமையைப் பெறலாமென்கிறூர். இத்தகைய ஆழ்வார் திருவடிகளில் பக்தி மேன்மேலும் பொங்க மனம்-மொழி முடி ஆகிய முக்காரணங்களாலும் எந்நாளும் தொழுவதாகக் கூறி முடிக்கின்றூர் ஆளவந்தார். இதற்கு மேல் ஸ்ரீதேசிகன் - தென்மொழி உபநிடதத்தைக் கண்ட ஆழ்வாரின் அதியற்புதமான உண்மை நிலையை நன்கு கேட்டுணர்ந்தவர் ஆழ்வார் விஷயத்தில் வருணம் முதலியவற்றைப் பற்றி வீண் வழக்காடமாட்டார்களென்றும் தேவரஹஸ்யங்களில் உட்புகுந்து காரணம் கேட்பது வீண் பிரயாசம் என்ற ரீதியை இங்கும் உணர்ந்து அறிஞர்கள் மகிழ வேண்டுமென்றும் மிக அழகாக முத்திரை வைத்துப் பிரதிவாதிகளின் வாயை அடக்கியுள்ளார்.

## ஸ்ரீபாஷ்யகாரரின் பக்தி விசேஷம்

இங்ஙனம் ஸ்ரீநாதமுனிகளாலும் ஆளவந்தாராலும் தம் குல தெய்வமாகப் போற்றப்பெற்ற நம்மாழ்வாரிடம் தர்சநஸ்தாபகரான எம்பெருமானார் கொண்ட ஈடுபாடும் பக்தியும் கூறுந்தரமல்ல. ஸ்ரீபாஷ்யகாரர் ஆழ்வார் விஷயமாகப் பிரஸ்தாபம் எடுக்காததைக் கூறி அவர்பால் ஈடுபாட்டுக்குறைவைச் சங்கிப்பர் சிலர். உண்மை நிலை வேறு. நம் ஸித்தாந்தத்தைக் காப்பதில் முந்திய ஆசார்யர்களுக்கு இல்லாத பெருஞ்சுமை ஸ்ரீபாஷ்யகாரர் திருமுடியில் வீழ்ந்தது. அவர் காலத்தில் புறச்சமயத்தினரான பல்வகையினர் தலையெடுத்துத் தங்கள் தீய பிரச்சாரத்தால் மக்களை மயக்கித் தம்வலையுள் அகப்படுத்தி நாட்டைச் சீர்குலையச்செய்தனர். அவ்வப்போது ஸ்ரீ பாஷ்யக்காரரே வாதம் புரிந்தும் கண்டந நூல்களை இயற்றியும் பிரதிவாதிகளை வென்று செருக்கை அடக்கி அவர்களின் மதங்களை ஒழிக்கவும் வேண்டியிருந்தது. அங்ஙனம் செய்து வெற்றி கண்டதாலேயே அவர் ஸ்ரீமந் நாராயணனே பரதேவதை என்றும், மோக்ஷம்பெற அத்திவ்ய தம்பதிகளே உபாயம் என்றும் உபய வேதாந்தங்களும் கண்ட பரம ஸாரார்த்தத்தையும் உலகில் நிலைநாட்ட முடிந்தது. இங்ஙனம் அவர் பிரதிவாதிகளை அடக்கும் பெருந்தொண்டிலேயே நெடுங்காலம் ஈடுபடவேண்டியதாயிற்று. அதனால் நாதமுனிகள் ஆளவந்தார் முதலிய முந்திய ஆசார்யர்கள் அனைவரும் குலதெய்வமென ஒரு முகமாய் முடிவு கண்ட ஆழ்வார் விஷயத்தில் தாம் புதிதாய் ஸ்தோத்ர மூலமாகவோ வேறு வழியிலோ பிரஸ்தாவிக்க அவகாசத்தை எடுத்துக் கொள்ளவில்லை. எம்பெருமானார் செய்த அருஞ்செயல்களுக்கெல்லாம் ஆழ்வாருடைய திவ்ய ஸூக்தியே உற்ற முதற்றுணையாயிருந்ததாய் நேரிடையாகக் கண்ட அமுதனார் தம் நூற்றந்தாதியில் விளக்கியுள்ளார். ஆளவந்தார், நம்மாழ்வார் திருவடிகளையே ஸகல பந்துவாயும் ஸர்வஸ்வமாயும் கொண்டார். ஸ்ரீபாஷ்யகாரரோ ஆழ்வாருடைய திருவாய்மொழியையே எல்லா உறவாகவும் எல்லாச் செல்வமாகவும் கொண்டதோடு அதையே திவ்ய தம்பதிகளாகவும் கொண்டதாகக் கண்கூடாகக் கண்ட அமுதனார் தம் பிரபந்தத்தில் விளக்கினார். மேலும் அவ்வமுதனார் தம் நூற்றந்தாதியைத் தொடங்கும் போதே எம்பெருமானாரை ஆழ்வார் திருவடிகளைப் பணிந்து உஜ்ஜீவித்தவராகவே கூறிக் கொண்டு தொடங்குகின்றூர்.

ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளும் போது அவருக்கு இருந்த மநோரதங்களுள் ஒன்றுகிய திருவாய்மொழிக்கு உரையிடுதலைத் தலைக்காட்டும் பொறுப்பும் எம்பெருமானாருக்கு வந்திருந்தது. அவர் பிற மதங்களை வேரறுத்துத் தம் ஸித்தாந்தத்தை நிலைநாட்டிய பின் அந்தக் கவலை தலைகாட்டியது. திருவாய்

மொழியை அநுதினமும் அநுஸந்தித்து ஆழ்வாருடைய திருவருளால் அவரது ஸூக்தியில் அமைந்த உள்ளக்கருத்துக்களை உள்ளவாறு எம்பெருமானார் கண்டறிந்தவர் தாம். ஆனால் அந்த ஸூக்திக்கு தாமே உரையிடுவதினும் தம்மிடம் ஸகலார்த்தங்களையும் உபதேசிக்கப்பெற்றுத் தம்மையே கண்கண்ட தெய்வமாக மதித்துவரும் அந்தரங்கச் சீடரான திருக்குருகைப் பிரான் பிள்ளானைக் கொண்டு வியாக்கியானமிடுவது மிகச் சிறக்குமென்று எம்பெருமானார் திருஉள்ளத்தில் தோன்றியது. அவரை அழைத்து இப்பணியைச் செய்யுமாறு ஸ்ரீபாஷ்யகாரர் நியமித்தருளினார். அவரும் இந்த நியமனத்தைச் சிரமேற் கொண்டு எம்பெருமானாரிடம் காலக்ஷேப கோஷ்டியில் தாம் கேட்டுணர்ந்த திருவாய்மொழியின் உட்கருத்துக்களை அவர் திருவடிகளையே தியானித்துக் கொண்டு அத்யாச்சர்யமான மணிப்ரவாள நடையில் திருவாறாயிரப்படியென்னும் பகவத் விஷயமாக உருவாக்கி ஆசார்யன் திருமுன்பே ஸமர்ப்பித்தார். ஸ்ரீபாஷ்யகாரரும் இந்த நூலைக் கடாக்ஷித்து மிக உவந்து இதையே பின்பு சீடர்க்கு ப்ரவசநம் செய்தார். இதினின்று இந்த வியாக்யானத்தின் மேம்பாட்டை உணர்ந்து கொள்ளலாம். இந்த உரை நூல் அவதரித்திராவிடில் திருவாய்மொழிக்கு ஆழ்வார் திருவுள்ளத்தில் உறைந்த ரஹஸ்யார்த்தத்தை ஸ்ரீ பாஷ்யகாரர் கண்ட முறையில் நாம் எவ்வாறு அறிய முடியும்? மேலும் முதன் முதலாக மணிப்பிரவாள நடையை உலகுக்குக் கொண்டு வந்து காட்டிய நூலும் இதுவே யாகும்.

## ஸ்ரீதேசிகனது ஈடுபாடு

இங்ஙனம் மும்முனிவராலும் எம்பெருமானிலும் மேம்பட்ட முறையில் போற்றப்பெற்ற ஆழ்வாரிடம் ஸ்ரீதேசிகன் கொண்ட ஈடுபாடு இன்னும் அதி விலக்ஷணமானது. திவ்ய தம்பதிகளின் திருவடிகளில் தம்முடி வைத்து வணங்கச் சடகோபன் திருவருள் வேண்டுமென்கிறார் நம் தேசிகன். நாம் பெரியோர்களை வணங்கி அபிவாதநம் செய்யும் போது இன்னசாகையைச் சேர்ந்தவர் என்று கூறுவது போல் தம்மைத் தமிழ் மறையோன் எனக்கூறிக்கொள்கின்றார்; திவ்யப்ரபந்தங்களை ஆசார்யர்கள் வாயிலாகத் தெளிவாய் அத்யயநம் செய்து கற்றமையால் வேதாந்த ரஹஸ்யங்களில் இதுகாறும் தெளியாத அம்சங்களைத் தெளிந்து கொண்டதாகப் பறைசாற்றுகின்றார்; திருவாய்மொழிக்கு ஸ்ரீபாஷ்யகாரர் வாயிலாக அவதரித்த திருவாறாயிரப்படிக்கு விரிவான உரையாக நிகமபரிமளம் என்னும் ஸூக்தியை அருளிச் செய்தார். நம் தீவினையால் அது மறைந்து விட்டது. அந்நூல் மறையாதிருந்தால் நாம் எத்துணை நலம் பெற்றிருப்போமென்பதை நினைக்கும் போது கண்கள் நீரைப்பெருக்குகின்றன. திருவாய்மொழியின் ஒவ்வொரு பாசுரத்தாலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு கல்யாண குணம் வெளியாகின்றதென்பதைத் தாத்பர்ய ரத்நாவளி என்ற நூலால் உலகுக்குக் காட்டியருளினார்.

## ஆழ்வார் பராங்குச நாயகியாதல்

ஆழ்வார் திருவாய்மொழியில் பல பதிகங்களில் தாம் பெண் தன்மையைப் பெற்று நாயகனென்ற முறையில் எம்பெருமானை அநுபவித்ததற்கு ஸ்ரீதேசிகன் வியாச முனிவர் காட்டிய முறையைக் கொண்டு ஓர் அழகிய விளக்கம் தருகின்றார். த்ரௌபதி நீராடிக் கொண்டிருந்தாளாம். அச்சமயத்தில் பல பெண்களும் உடனிருந்தனராம். அப்பொழுது பாஞ்சாலியின் மேனியழகு முற்றும் புலனாவதைக் கண்டு மயங்கினராம் பெண்கள். அவளது பெண்மைக்கு ஏற்ற ஆண்மையைத் தாம் பெற்றனராக மனத்தால்பாவித்துக் கொண்டார்களாம். இதை வ்யாஸபகவான் வெளியிட்டார் இம்முறையிலே எம்பெருமான் திருமேனியழகில் உள்ளத்தைக் கொள்ளை கொடுத்த ஆழ்வார் அவனுக்கு வசப்பட்ட காதலியாகவே மாறிப் பராங்குச நாயகியாகி விட்டார். அவருக்கு அவனிடம் இருந்த உறுதியான பக்திப் பெருக்குப் பெருங்காதலாக வடிவு கொண்டது. சிருங்கார ரஸத்தின் நடுவில் பிரிவும் இருந்தால் தானே ரஸிக்கும்! பாராங்குசநாயகி எம்பெருமானைக் கூடுவதாக அநுஸந்திக்கும் நிலைக்கு முன்பும் பின்பும் உள்ள நிலையே விரஹதசையாம். பிரிந்த நிலையில் தூது விடுவதுண்டே உலகில்; பராங்குச நாயகிக்காக எம்பெருமானாகிய நாயகனிடம் தூது செல்பவர் ஆசார்யர்க

ளாம். வண்டு கிளி முதலிய பறவைகளைத் தூது விடுவதின் உடகருத்து ஆசார்யர்களை எம்பெருமானிடம் நமக்காக பரிந்து பேசச் செய்வதேயாம். இந்த நிலையில் பலவகையாகப் பரம புருஷனை அநுபவித்து அநுபவித்துப் பெற்ற அந்த ஆனந்தம் வெள்ளமிட்டோடித் திருவாய்மொழியாக வடிவு கொண்டதாம். அதனால் செவிக்கினிய செஞ்சொல்லாக அமைந்ததென்கிறார் ஸ்ரீ தேசிகன். ஆழ்வார் விஷயத்தில் ஸ்ரீதேசிகனுக்கு உள்ள ஈடுபாட்டின் மிகுதியை ஸ்வாமி ஸூக்திகளை ஸேவிக்கும்போது ஒவ்வோரிடத்திலும் நன்கு காணலாம்.

### கலியன் அத்யயந உத்ஸவம் நடத்தல்

நம்மாழ்வாரிடம் பெருமதிப்பும் அவர் அருளிய திருவாய்மொழியில் மிக்க ஈடுபாடும் கொண்டவர் ஆழ்வார்களுள் கடைக்குட்டியாக அவதரித்த திருமங்கையாழ்வார் இந்த அற்புதப் பிரபந்தத்தைப் பெரிய பெருமாள் திருச்செவி சாற்றும் படியும் திருக்குருகூரில் எழுந்தருளியுள்ள அர்ச்சைத் திருமேனிக்குத் திருவரங்கன் ஸேவை கிடைக்கும் படியும் செய்யவேண்டுமென்று திருமங்கையாழ்வாருக்கு அவா பெருகியது. திருமங்கை மன்னன் உடனே ஸகல பரிவாரங்களுடனும் திருப்பல்லக்கு-குடை-சாமரம் முதலியவற்றுடனும் திருக்குருகூருக்கு எழுந்தருளி அங்கிருந்து நம்மாழ்வாரை ஸகல மரியாதைகளுடனும் எழுந்தருளச் செய்து திருவரங்கத்துக்குத்திரும்பினார். மார்கழி மாதம் சுக்ல பக்ஷம் ஏகாதசி தொடங்கிப் பத்து நாள் திருவத்யயந உத்ஸவத்தை நடத்தினார்; தினந் தோறும் ஒருபத்தாகப் பெரிய பெருமாள் திருமுன்பே திருவாய்மொழியைக் கோஷ்டியாக அநுஸந்திக்கும் படிச் செய்தார்; நம்மாழ்வாருக்கு அருளிப்பாடிட்டுப் பெரிய பெருமாள் திருமாலை - திருப்பரியட்டங்களை ஆழ்வார் பெறச் செய்து உத்ஸவத்தை தலைக் கட்டி வைத்தார். பின் நம்மாழ்வாரை மீண்டும் திருக்குருகூருக்கு எழுந்தருளச்செய்தார். ஒவ்வோர் ஆண்டிலும் அங்கிருந்து எழுந்தருளச்செய்யும் சிரமத்தைக் கருதிப் பின் ஆண்டுதோறும் கோயிலில் உள்ள ஆழ்வாருடைய அர்ச்சையைக் கொண்டே அவ்வுத்ஸவத்தைத் திருமங்கையாழ்வார் நடத்தி வந்தார்.

### திருவாய்மொழியின் நித்யத்தன்மை

இந்தப் பிரபந்தம் வேதத்தைப் போல் அழிவில்லாது நித்ய தன்மையுடையதென்றே நெடு நாளைய பெரியோர்கள் பலர் கொண்ட முடிவு. ஸ்ரீதேசிகன் இவ்வாழ்வாருடைய ஸூக்தியைப் பற்றிப் பேசும் இடங்களிலெல்லாம் ஆழ்வார் இயற்றிய மறை என்று பேசாமல் ஆழ்வார் கண்ட மறை என்றே அருளிச் செய்வது நித்யம் என்ற கொள்கையை வலியுறுத்துகின்றது. ஆனால் தமிழ் வழக்கில் ஓர் ஆசிரியர் புதிதாய் இயற்றிய நூலையோ உரையையோ ஆசிரியர் கண்ட நூல் உரை என வழங்குவது உண்டு வடமொழியிலோ 'காணப்பெற்ற' என்ற பொருள் கொண்ட 'த்ருஷ்ட' முதலிய சொற்கள் பெரும்பாலும் ஸாக்ஷாத்கரித்ததைக் கூறுமேயன்றிப் புதியதாய் இயற்றியதைக் கூறுவது வழக்கில்லை. இவ்வாறு காண்கையே பொருளாய்ப் பெற்ற வடமொழி வினைச்சொற்களைப் பல்வேறு இடங்களிலும் ஸ்ரீதேசிகன் திருவாக்காய்க் காணும்போது ஆழ்வார் பிரபந்தம் நித்யமென்ற கருத்தே ஸ்ரீதேசிகன் திருஉள்ளத்தில் ஓடுவதாக உறுதியாய்க் கூற முடிகின்றது. சப்தம் அழியுந் தன்மையதாயிருக்கையில் வேதம் நித்ய மென்பது நம் ஸித்தாந்தத்தில் எவ்வாறு நிலைநாட்டப்படுகின்றது? எத்தனைப் படைப்புகள் வந்தாலும் வேதத்தின் அநுபூர்வி மாறாமல் ஒரே நிலையில் இருப்பதுவே நித்யத் தன்மையாவதாகத் தானே நம் ஸித்தாந்தம்! அவ்வாறே நம்மாழ்வார்கண்ட திருவாய்மொழியும் அதன் சொற்றொடர் நிலை எக்காலத்தும் மாறாது ஒரே வகையில் நிற்பதென்று கண்டு நம் பெரியோர் நித்யமென முடிவு கட்டினர்.

மேலும் ஆழ்வார் தாமே திவ்ய தம்பதிகள் வேதங்களைப் பிரமன் வாயிலாக உலகுக்குக் காட்டியருள்வது போல் தமிழ் மறையையும் அவர்களே தம்முள் புகுந்து தம் வாயிலாகப் பாடி உலகுக்கு அளிப்பதாய்க் கொண்ட திருவுள்ளத்தைப் பிள்ளான் திருவாறாயிரப் படியில் தெளிவாய்க் காட்டியுள்ளார்.

### பிரபந்த அத்யயநம் அவசியமானது

ஆழ்வார்களின் அருளிச்செ

யலை ஒவ்வொரு ஸ்ரீ வைஷ்ணவரும் வேதாத்யயநம் செய்வது பொல் ஆசார்யனிடம் அத்யயநம் செய்தேயாக வேண்டும். உபநயநத்துக்குப் பின்பே இளைஞர்கள் மற்ற மூவாயிரத்தையும், பஞ்ச ஸம்ஸ்காரம் ஆனபின்பே திருவாய் மொழியையும் அத்யயநம் செய்வது தொன்று தொட்டு வரும் முறை. மற்ற மூவாயிரத்தையும் ஓதிக் கற்கும் வாய்ப்பு இல்லாதவர்களும் திருவாய்மொழியை மட்டுமாவது அவசியம் ஓதியுணர்ந்தேயாக வேண்டும். ஸ்ரீ பாஷ்யகாரர் இரண்டு ஆசார்யர்களிடம் திருவாய்மொழியை அத்யயநம் செய்வதாக ஸ்ரீ தேசிகன் வெளியிட்டருளினார்.

இப்படி எல்லா ஆசார்யர்களும் ஒருமுகமாய் ஒப்புயர்வற்றதெனப் போற்றிய திவ்யப் பிரபந்தத்தில் மிக்க பக்தியும் ஈடுபாடும் கற்பதில் சிரத்தையும் ஞானமும் நமக்கு வளருமாறு அருள் புரியும்படி ஆழ்வார் திருவடிகளிலே பிரார்த்திப்போமாக.

ஸ்ரீ தேசிகன் பிரபந்தசாரத்தில் 6-வது நம்மாழ்வாருக்கு இட்ட பாசுரம்:-

"முன்னுரைத்த திருவிருத்தம்
நூறுபாட்டும்
முறையின் வருமாசிரிய மேழுபாட்-
டும்
மன்னியநற் பொருட்பெரிய
திருவந்தாதி
மறவாதபடி யெண்பத்தேழு பாட்
டும்
பின்னுரைத்த தோர்திருவாய்
மொழியெப்போதும்
பிழையற வாயிரத்தொரு
நூற்றிரண்டுபாட்டும்
இந்நிலத்தில் வைகாசி விசாகந்
தன்னில்
எழுற்குருகை வருமாறு
இரங்குநீயே"

உரை-வைகாசி விசாகத் திரு நன்னாளில் இவ்வுலகில் அழகு பொருந்திய திருக்குருகூரில் அவதரித்த சடகோபனே! நீ முதலில் அருளிச் செய்த 100 பாசுரங்கொண்ட திருவிருத்தத்தையும், அடுத்து அவதரித்த 7 பாசுரங்கொண்ட திருவாசிரியத்தையும், எந்நாளும் மறக்க முடியாதபடி சிறந்த ஸாரார்த்தம் பொருந்திய 87 பாசுரங் கொண்ட பெரிய திருவந்தாதியையும், அதன் பின்பு நன்கு அநுஸந்திக்கும்படி அருளிய 1102 பாசுரங்கொண்ட திருவாய் மொழியையும் எந்நாளும் பிழையற அநுஸந்திக்கும்படி நீ அருள்புரிய வேண்டும்.

[இப்பாசுரத்துக்கு விசேஷார்த்தங்களை உரைப் பதிப்புகளில் கண்டுகொள்க.]

[நன்றி: ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ரியா ஆழ்வார்களின் வைபவம் ஸம்புடம்-27, சஞ்சிகை-7, கீலக வருஷம் ஐப்பசி மாதம்]





ஸ்ரீபஞ்சநதீஸ்வரர் கோயில்
மேற்கு கோபுரம்
-திருவையாறு.

# எழில் கொள் சோதி

டாக்டர் மா. வரதராஜன், திருப்பதி.

நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் மூன்றும் பத்து இரண்டாவது பதிகமான முந்நீர் ஞாலத்தில் அடிமைத் தன்மைக்குத் தடையான உடற்பிறவியைப் போக்க வேண்டுகிறார். அதற்கு ஏற்ப திருவேங்கடவன் தான் திருமலையில் நிற்கும் நிலையைக் காட்டினான். இந்நிலையைக் கண்ட ஆழ்வார் அடுத்த பதிகமான ஒழிவில் காலமெல்லாமில் அப்பெருமானிடம் எல்லா முறையிலும் அடிமை செய்யப் பாரிக்கிறார். இவ்விடத்தில், பசி இருக்குமவன் கையில் உணவுமிருந்து நீரும் நிழலுமுள்ள இடத்தைக் கண்டால் உண்ண முற்படுவது போல ஆழ்வார் நிலை அமைந்ததாகக் கூறுவர் நம்பிள்ளை.

திருமலையில்நிற்கிறநிலையை மனத்தே கண்ட ஆழ்வார் திருவேங்கடத்துக்கு 'எழில் கொள் சோதி' என்ற பெயரைச் சூட்டுகிறார். அதாவது அழகானதும் ஒளியுடையதுமான திருமேனியையுடையவன் திருவேங்கடவன் என்றபடி. மேலும் திருவேங்கடவனின் திருமார்பில் 'அகலகில்லேன் இறையும்' என்று அலர்மேல்மங்கை அழகுடன் வீற்றிருக்கும் இருப்பைக் கூட்டி எழில் கொள் சோதியாகக் கூறுவர் வாதிகேசரி ஜீயர். பரமபதத்தில் இருக்கும் சோதியானது பகலில் விளக்கு வைத்தாற்போலிருக்கும். திருப்பாற்கடலில் இருக்கும் சோதியானது கடலே கொள்ளை கொண்டு கிடக்கும். மற்றவர்கள் பார்க்கமுடியாது. ஆனால் வேங்கடத்து எழில் கொள் சோதியோ 'வேங்கடம் மேய விளக்கு' என்கிறபடியே குன்றின் மேலிட்ட விளக்காயிருக்கும். இப்படி விளக்காயிருப்பவன் எல்லாரைக் காட்டிலும் உயர்ந்த தலைவனுமாவான். இதுபற்றியே 'எந்தை தந்தை தந்தை' என்கிறார் ஆழ்வார். இப்படிப் பட்ட தலைவனிடத்து 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்' என்கிறபடியே ஒழிவில்லாத காலமெல்லாம் எல்லா இடத்தும் இருந்து எல்லா நிலைமையிலும் பிரியாது நின்று ஒன்றும் குறையாதபடி எல்லா அடிமைகளையும் செய்ய பாரிக்கிறார் ஆழ்வார்.

எல்லாரைக்காட்டிலும்உயர்ந்த தலைவனின் குணத்தை அநுபவிக்கும் போது 'அந்தமில் புகழ்' என்று உரைப்பர். அதாவது முடிவில்லாத குணப்பெருமையை உடையவன் என்றபடி. திருமலையில் இருப்பால் இக்குணப்பெருமைக்கு முடிவேயில்லையாம். இப்படி குணப்பெருமைக்கு இருப்பிடமான திருமலையோ, பரமபதத்திலிருக்கும் நித்ய ஸூரிகளும் தங்கள் தலைவனான சேனை முதலியாரோடு கூடிநின்று தூவின விடு பூக்கள் இம்மலையில் தொடுதலாலே மலரும் தன்மையதாய்த் தனவாம். இவ்வாறு குணத்தாலும் அழகாலும் உயர்ந்தவனாய் இருப்பது பற்றித் 'திருவேங்கடவன் காரெழில் அண்ணலானான். இத்தகைய பிரிதொன்றிக்கில்லாச் சிறப்பெய்திய அழகு என்ன, குணப்பெருமை என்ன - ஆகியவற்றை நித்யஸூரிகள் அநுபவிக்கும் அழகுதான் என்னே!

அடுத்து, திருவேங்கடவன் திருமேனியே தலைவன் இவன் என்று தோன்றும்படி உள்ளதாம். அதற்கேற்ப குணம் செல்வம் ஆகியவற்றோடு கூடியவனுமாவான். அவனது அழகான தாமரை போன்ற கண்களோ இச் செல்வங்களைக் குறிப்பிடுவதாக உள்ளனவாம். இது பற்றியே 'அணிகொள் செந்தாமரைக் கண்ணன்' என்கிறார் ஆழ்வார். திருவேங்கடவனது பவளவாயோ, சிவந்த கனிபோன்றது. தாமரை போன்ற கண்களின் பார்வையில் மயங்கியவரை தெளிவிக்க உறுப்பாக அமைந்தது இத்திருபவளவாய். குலசேகரப் பெருமாளும் திருமலையில் படியாய்க் கிடந்து அவன் பவளவாய் காண ஆசைப் பட்டது நினைதற்பாலதாகும். இப்படி அவயவ அழகிலே ஈடுபட்டாரை அநுபவிக்கைக்கு உறுப்பாக நீலமணிபோல ஒளியான பளபளப்பான திருமேனியை யுடைய

வன் மலையப்பன். அவன் இருக்கும் இடமோ தெண்ணிறச்சுனை நீரையுடைய திருமலை. அதாவது அவன் திருமேனி நிறம்போல தெளிந்து பளபளப்பான நிறத்தையுடைய சுனைநீரையுடையது திருமலை என்பர்.

இப்படித் திருமலையில் நிற்கையாலே எண்ணற்ற இயற்கையான குணப்பெருமையை உடையவனாய் இருக்கிறுன் திருமலையப்பன். அப்புகழை அநுபவிக்கவரும் அடியவர்க்கும் வானவரான நித்யஸூரிகளுக்கும் தம் அநுபவத்தைக் கொடுத்து நிற்கும் ஏற்றமுடைய தலைவனானது பற்றி 'எண்ணில் தொல்புகழ் வானவசன்' என்கிறுர் ஆழ்வார்.

இவ்வாறு நித்ய ஸூரிகள் சேவிக்கும் பெருமை பெற்றவன் ஆழ்வாரிடம் பாசம் வைத்ததை எண்ணி 'நீசனேன் நிறையொன்றுமிலேன் என்கண் பாசம் வைத்த பரஞ்சுடர்சோதி' என மனம் உருகுகிறுர். திருவேங்கடத்தெழில் கொள் சோதியானவன் அந்தமில் புகழால் காரெழில் அண்ணலானான். இப்படி அழகாலும் குணத்தாலும் பெருமை பெற்றவன் நித்யஸூரிகள் இத் திருமலையில் வந்து சேவிக்கும் பாக்கியம் பெற்றதால் எண்ணில் தொல் புகழ்வானவரீசனான். வானவர் ஈசனானவன் ஆழ்வாரிடத்து எல்லையற்ற பாசத்தை வைத்தது பற்றி பரஞ்சுடர் சோதியானான். அறப்பெரியவன் அறத்தாழ்ந்தவனோடு புரையறக் கலக்கும் சீலகுணம் இங்கு நிறம் பெற்றபடி.

ஆழ்வார் தம்மைப்பற்றிச் சொல்லும்போது கெட்ட குணங்கள் நிரம்பி ஸத்துவ குணங்களில் வரும் நிறைவு ஒன்றுமில்லாதவன் என்று கூறிக்கொள்கிறுர். குற்றங்கட்கு எதிர்த்தட்டான கல்யாணகுணங்களையுடையவன் இப்படி குற்றமே தன்மையனான தன்பக்கல் எல்லையற்ற பாசத்தை வைத்து அதுதான் நிறம் பெறும்படி ஒளியோடு கூடிய பளபளப்பான திவ்ய திருமேனி கொண்டு திருமலையில் நிலைத்து நிற்பதாகக் கூறுவர் ஆழ்வார். அத் திருமலையானது இந்நீர்மை குணத்துக்குப் பாங்காக உள்ளதாம்.



ஆழ்வாரிடம் பாசம் வைத்த பரஞ்சுடர்சோதியே எல்லா உலக மக்களும் அடைந்து தொழும்படி ஆதிமூர்த்தியானான். அம்மூர்த்தியோ தீதில் சீர் நிரம்பப் பெற்றவன் தீதில் சீர்மையாவது கானமும் வானரங்களும் மற்றும் தாழ்ந்தவர்களான வேடர்களும் அநுபவிக்கும்படித் தன்னை அநுபவிப்பதாகும். இதுபற்றியே 'தீதில் சீர்திரு வேங்கடத்தான்' என்கிறுர் ஆழ்வார். இப்படித் தாழ்ந்தாரை மட்டுமா அநுபவிப்பிக்கிறுன். அவன் வேதியர் முழு வேதத்து அமுதனுமாவான். அதாவது வைதிகர்கள் ஓதும் வேதங்களில் 'ஆநந்தோ ப்ரஹ்மா' என்றும், 'ரஸோவைஸ' என்றும் சொல்லும்படி மிகுதியான அமுதமாயிருப்பவன். இத்தன்மையனன்ரே சோதியாகி- பளபளப்பான திருமேனியோடு கூடியவனாய் உயர்வு தாழ்வற்ற மக்கள் தம்மை அடையும்படியாய் எல்லாவற்றுக்கும் காரணமுமாய் இருப்பவனாவான்.

(30-ம் பக்கம் பார்க்க)

# ஆழ்வார் திவ்ய பிரபந்தச் செயல்திட்டத் தொடக்கவிழாவும் நாலாயிரத் திவ்ய பிரபந்தக் கருத்தரங்கும்

ஆழ்வார்களின் அருளிச் செயல்களைப் பரப்பும் நோக்கத்துடன் தி. தி. தேவஸ்தானத்தாரால் ஆரம்பிக்கப்பட்ட ஆழ்வார் திவ்ய பிரபந்தச் செயல் திட்டத்தின் தொடக்கவிழா மதுரகவிகளும் திருமலை அனந்தாழ்வான் என்னும் ஆசார்யரும் அவதரித்த நாளான ஏப்ரல் 28ம் தேதியன்று நடைபெற்றது. விழாவுக்குத் தலைமை தாங்க வேண்டியிருந்த ஸ்ரீ எம்.வி.எஸ். பிரஸாத் அவர்கள், I.A.S., Executive Officer அவர்கள் வெளியூர் சென்றதால், Dr. C. அன்னாராவ் அவர்கள் தலைமை வகித்தார். உயர்நீதிமன்ற நீதிபதி திரு. என். க்ருஷ்ணஸ்வாமி ரெட்டியார் அவர்கள் விழாவினைத் துவக்கி வைத்தார். வேதபாராயணத்துடன் தொடங்கிய விழாவில் டாக்டர் ராவுல சூர்யநாராயண மூர்த்தி அவர்கள்,PRO, TTD. தமது வரவேற்புரையில் இத்திட்டத்தின் முக்கியத்துவத்தைக் கூறி, இதற்காக ரூ. 9 லட்சம் தேவஸ்தானம் நிதி ஒதுக்கி வைத்திருப்பதாகவும் கூறினார். ஸ்ரீமத் பரமஹம்ஸ பெரிய கோயில் கேள்வி அப்பன் கோவிந்த ராமானுஜ பெரிய ஜீயர் ஸ்வாமிகள் குத்து விளக்கேற்றி, திருவேங்கடமுடையான் 'விஷயமாக அச்சிட்ட நான்கு கை அடக்க நூல்களை வெளியிட்டார். இவற்றைப் பெற்றுக் கொண்ட ஸ்ரீஉவே. திருமலை அனந்தாண்பிள்ளை கோவிந்த நரசிம்மாசார்ய ஸ்வாமிகள், ஆழ்வார்கள் அடங்கிய புகைப் படத்தைத் திறந்து அவர்களின் பெருமையை எடுத்துரைத்தார். பிறகு நீதிபதி அவர்கள் ஆற்றிய தொடக்க உரையில் 108 திவ்ய தேசங்களின் நிலைமையை எடுத்துக்கூறி அவற்றை புதுப்பிக்க TTD முன்வர வேண்டும் என்று கூறினார். மேலும் மூன்று நாள் கருத்தரங்கைத் துவக்கி வைத்துப் பேசுகையில் ஆழ்வார்களின் அருளிச் செயல்களும் அவற்றின் உரைகளும் தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் மட்டுமல்லாது மற்ற இந்திய மொழிகளிலும் வெளிவந்து பக்தியைப் பரப்ப வழி செய்ய வேண்டும் என்று கூறினார்.

ஆழ்வார்களும் நாலாயிரத் திவ்ய பிரபந்தங்களும் பற்றி சிறப்புரையாற்றிய பேராசிரியர் எம். நரசிம்மாச்சார்யார் (வைணவத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்) பேசும் போது திருவேங்கடவன் விஷயமாக 202 பாசுரங்கள் அமைந்ததின் பெருமையை எடுத்துச் சொன்னார். டாக்டர் எம். வரதராஜன், (சிறப்பு அலுவலர், ஆழ்வார் திவ்ய பிரபந்தத்திட்டம்) நன்றி செலுத்த இனிதாக. தொடக்க விழா நிறைவு பெற்றது.

ஐந்து பகுதிகளாகக் கொண்ட மூன்று நாள் கருத்தரங்கு 28ம் தேதி பிற்பகல் தொடங்கியது. பேராசிரியர் நரசிம்மாசார்யார் தலைமையில், ஸ்ரீ உவே. P.T.G. அந்தர்வேதி நரசிம்மாசார்ய ஸ்வாமி (மசூலிப்பட்டணம்) 'திருவேங்கடவனும் பொய்கையாழ்வாரும்' பற்றி உபந்யாஸித்தார். 'திருவேங்கடவனும் பூதத்தாழ்வாரும்' என்ற தலைப்பில் டாக்டர் V. வரதாச்சாரி (பாண்டிச்சேரி) உபந்யாஸமும், 'திருவேங்கடவனும் பேயாழ்வானும்' என்பது பற்றி ஸ்ரீஉவே. T.E.சம்பத்குமாரார்சார்யா ஸ்வாமி, (சென்னை) உபந்யாஸமும் நடைபெற்றன. இறுதியாக டாக்டர் K.A. மணவாளன், (சென்னை) 'திருவேங்கடவனும் திருமழிசைப்பிரானும்' என்ற தலைப்பில் உபன்யாஸித்தார்.

மறுநாள் 29ம் தேதி மேலக்கோட்டையிலுள்ள வடமொழி வளர்ச்சிக்கழக டைரக்டர் Dr. M.A. லக்ஷ்மிதாதாசார்ய ஸ்வாமி, 'ஆழ்வார்கள் பாடலில் மங்களாசாசனங்கள்' என்ற தலைப்பில் உபன்யாஸித்தார். பின்னர், இரண்டாவது பகுதிக்கு ஸ்ரீ உவே. தி.அ. கோவிந்தநரசிம்மாசார்யஸ்வாமி தலைமை வகித்து 'திருவேங்கடவனும் குலசேகரப் பெருமாள் மற்றும் திருப்பாணாழ்வாரும்' பற்றி உபந்யாஸித்தார். டாக்டர் எம்.ஏ. வேங்கடகிருஷ்ணன் (சென்னை) 'நம்மாழ்வாரும் திருவேங்கடவனும்' என்ற

தலைப்பில் சொற்பொழிவாற்றினார். பிற்பகல் நடந்த மூன்றுவது பகுதிக்குத் தலைமை வகித்த ஸ்ரீ உவே.தி.அ. கிருஷ்ணமாச்சார்ய ஸ்வாமி (காஞ்சி) 'திருவேங்கடவனும் பெரியாழ்வாரும்' என்ற தலைப்பில் உபந்யாஸித்தார். டாக்டர் தெ. ஞானசுந்தரம் அவர்கள் (சென்னை) 'திருவேங்கடவனும் திருமங்கை மன்னனும்' என்ற தலைப்பில் உபன்யாஸித்தார்.

30ம் தேதி காலை கருத்தரங்கில் பேராசிரியர் S.B.ரகுநாதாச்சார்யா தலைமை வகித்து ஸ்ரீ S.T.P.V. கூர்மாசார்யுலு(ஸ்ரீகாகுளம்), ஆழ்வார் பக்தி என்ற தலைப்பிலும் பேராசிரியர் K. ஸர்வோத்தமராவ் அவர்கள் (திருப்பதி) 'ஆந்திர சாகித்யத்தில் ஆழ்வார்கள்' என்ற தலைப்பிலும், பேராசிரியர் பொன். சௌரிராஜன் அவர்கள் (திருப்பதி) 'திருவேங்கமுடையானிடம் ஆசார்யர்கள் பங்கு' என்ற தலைப்பிலும் உபன்யாஸித்தனர்.

பிற்பகல் காஞ்சி ஸ்ரீ உவே பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யா ஸ்வாமி நூற்றுண்டு விழா நடத்தப்பட்டது. பேராசிரியர்V.V. ராமாநுஜன் (சென்னை) விழாவைத் துவக்கி வைக்க, ஸ்ரீ M.V.S. பிரசாத், I.A.S., E.O., TTD. சிறப்பாளராக இருந்தார். பேராசிரியர் உவே. N.S. ராமாநுஜ தாதாசார்ய ஸ்வாமி, துணை வேந்தர், சமஸ்கிருத பல்கலைக்கழகம், திருப்பதி, தலைமை தாங்கினார். ஸ்ரீ உவே. J. சேஷாத்திரி அய்யங்கார் (திருப்பதி), ஸ்ரீ உவே. P.B. ராஜஹம்சம், (காஞ்சி) மற்றும் ஸ்ரீ உவே. S. க்ருஷ்ண ஸ்வாமி அய்யாங்கார் (திருச்சி) ஆகியோர் ஸ்வாமியின் பெரிமைகளைப் பற்றி பேசினர். ஸ்ரீ பிரசாத் அவர்கள் காஞ்சி ஸ்வாமியின் பேரனான ஸ்ரீ P.B. ராஜ அம்சத்தை கௌரவித்தார். பேராசிரியர் ரகுநாதசார்யா நன்றி செலுத்த, இக்கருத்தரங்கம் சிறப்பாக முடிவடைந்தது.

(செய்தி: டாக்டர் எம். வரதராஜன், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.)



---

(28-ம் பக்கத் தொடர்ச்சி)

இங்ஙனே எல்லாவற்றுக்கும் காரணமானவனை அடையும் நெறிதான் என்னெனில் 'வேங்கடத்துறைவார்க்கு நமவென்னலாம் அது கடமை' என்கிறுர். அதாவது 'நான் எனக்கு உரியனல்லேன். இறைவனுக்கே உரிய்வனாவேன்' என்ற நினைவுடன் செயல்படுதலாகும். இவ்வாறு செயல்படவே, எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யத் தடையான பாபங்களும் மேல் செய்யப் போகும் பாபங்களும் தீயினில் தூசாகும்' என்கிற படியே அவிந்து போவன. இப்படி அவனை அடைவதில் எல்லை நிலமாக அவன் நின்ற திருமலையே வீடு பேற்றை அளிக்க வல்லதாகும். அத்திருமலையானது நித்ய ஸூரிகள் தங்கள் தலைவனான சேனை முதலியாரோடு உயர்ந்த புஷ்பங்கள், நீர், தூபம், தீபம் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு வணக்கத்தோடு வேறு பயனை விரும்பாது அவனையே தொழுவர். இதுபற்றியே சுமந்து மாமலர் நீர் தூபம் கொண்டு அமர்ந்து வானவர் வானவர்கோனொடும் நமன்று எழும் திருவேங்கடம்' என்று போற்றியுரைப்பர். திருமலையானது லக்ஷ்மியோடு கூடிய எம்பெருமான் திரிந்து விளையாடும்படி பரந்து இருப்பதால் 'தடங்குன்றம்' என்று கூறுவர். திருமலைக்கு இப்படிப்பட்ட முதன்மை வந்ததன் காரணம் யாதெனில் திருவேங்கடவனை அடையும் தன்மையில் எளிமையும், திருமலையோடு உள்ள சம்பந்தத்தால் வந்த ஏற்றம் பற்றி திருமலையே அடைவதற்கு உரியது என்பர். இத்தகைய திருமலையை 'வைத்தநாள் வரை எல்லை குறுகிச் சென்று எய்த்து இளைப்பதன் முன்னம் அடைமினோ' என்று தங்கள் முடிவுக்கு நாளிட்டதற்கு முன்பாகவும், அவயங்களுக்கு சக்தி குறைவதற்கு முன்பாகவும் அதன் காரணமான நெஞ்சு தளர்வு அடைவதற்கு முன்பாகவும் சென்று அடையச் சொல்லுகிறுர் ஆழ்வார்.

இவ்வாறு செய்தால் ஆழ்வார் வேண்டியபடியே எழில் கொள் சோதியின் கைங்கர்ய சாம்ராஜ்யத்தைப் பெற்று உலகம் புகழும் படி அடிமை செய்து வாழப்பெறுவர்.

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே சரணம்.



# அனன்ய பக்தி

திரு. எஸ். ராமசாமி-மதுரை.

அன்ய சிந்தனை இல்லாது எந்த பக்த ஜனங்கள் என்னையே உபாஸிக்கின்றனரோ, நித்யமும் என்னிடம் ப்ரேமை கொள்கிறுர்களோ அவர்களின் யோக க்ஷேமத்தை நானே நிர்வகிக்கிறேன் என்று பகவான் கீதையில் சொல்கிறுன.

அனன்ய சக்தி என்பதற்கு
'ஸர்வம் க்ருஷ்ண மயம் ஜகத்'
'ஸகலமிதமஹஞ்ச வாஸுதேவ:'

என்றபடி உலகில் யாவும், யானும் க்ருஷ்ண ரூபமான ப்ரம்மமே என்று ப்ரஹ்லாதனைப் போல் தியானம் செய்வது என்று பொருள். அப்படி தியானம் செய்த ப்ரஹ்லாதனின் யோக க்ஷேமத்தை பகவானே நிர்வகித்தான். நெருப்பும் சீதளமாயிற்று, விஷமும் அம்ருதமாயிற்று, கடலும் ஸ்தலமாயிற்று. எங்கும் பகவானே இருந்து அவனைக் காப்பாற்றவில்லையா?

ஆபத்து வரும் போது பல தெய்வங்களைக் கூப்பிடாமல் ஒரே தெய்வமானாலும், அன்ய தெய்வங்களை கூப்பிடாமல் பரதைவத்தையே 'ஆதிமூலமே!' என்றழைத்தான் கஜேந்திரன். இந்த யானையை ப்ரம்மாதி தேவர்களும், நான் இல்லை என்று கைவிட்ட போது ஆதிமூலமான பரவாசுதேவன் வந்து காப்பாற்றவில்லையா! அன்ய தேவதைகளை ஆதரிக்காமல் அவனையே ஆதரித்து இருப்பது அனன்ய பக்தி.

அன்ய சிந்தனையேயில்லாமல் பகவானின் சிந்தனையில் மனம் லயித்து இருப்பதும் அனன்ய பக்தி தான். துருவன் பகவத் தியானத்தில் மனம் லயித்திருந்து அன்ன பானமின்றி, ஒரு கட்டை போல் இருக்க, அவனுக்கு தேவர்கள் எவ்வளவோ விக்னம் செய்தும், அவன் தியானம் கலையாமல் இருக்க, கடைசியில் பகவானான பரவாசுதேவனே வந்து தர்சனம் தந்து, அவன் த்யானத்தை கலைக்கமுடியாமல் போய் துருவனின் இதயத்தில் உள்ள தன் ரூபத்தை மறைத்து கொள்ள, உடனே துருவன் கண் திறந்து பார்க்கவே, பகவான் காட்சி அளித்தான் இல்லையா! இதுவும் அனன்யபக்தி தான்.

அன்ய பலனைக் கருதாது அவனுக்கே எல்லாம் சொந்தம் என்று கருதி அவனுக்கே அர்ப்பணம் செய்து ரக்ஷித்தாலும் சரி, சிக்ஷித்தாலும் சரி என்று பலி சக்கரவர்த்தி போல் இருப்பதும் அனன்ய பக்திதான். பகவான் பலியின் சொத்து சுதந்திரத்தை எல்லாம் தானமாக வாங்கி இந்திரனுக்கு தந்து விட்ட போதிலும பகவான் தன்னையே சேவகனாக பலிச்சக்கரவர்த்திக்குத் தந்துவிட வில்லையா?

மாதா, பிதா, அண்ணன், தம்பி, பார்யா, புத்ரன், பந்து, மித்ரன், தனம், வீடு, வாசல், இஹம், பரம் என்று அன்ய ஆச்ரயங்களை விட்டு விட்டு "ராகவா நீயே கதி. நான் உன்னை சேர்ந்தவனாக இருக்கிறேன், என்னையும் சேர்த்துக் கொள்" என்று ஓடிவந்த விபீஷணன் செய்ததும் அனன்யபக்தி தான். அவனை உடனே தன் திருவடி நிழலில் சேர்த்துக் கொண்டு பகவான் அபயமளிக்கவில்லையா?

அன்ய சாதனமேதும் பயன் படாது போய் எல்லா சாதனங்களையும் கைவிட்டு இரு கைகளையும் தூக்கி கோவிந்தா' என்று அலறிய திரௌபதி செய்ததும் அனன்ய பக்தி தான் உடனே பகவான் அளவு கடந்த வஸ்த்ர தானம் செய்து, அவள் மானத்தை ஸம்ரக்ஷித்ததும், போதாமல் தூதனாயும், சாரதியாயும் பாரதப் போர் நடத்தி திரௌபதியை தர்மராஜனுடன் சேர்த்து அமர்த்தி பட்டாபிஷேகம் செய்வித்து மனம் மகிழவில்லையா?

துர்வாஸருடைய அகாரண மன கோபத்தையும், சாபத்தையும், பைசாசத்தையும் பார்த்துக்கூட தன்னைத்தானே ரக்ஷித்துக்கொள்ளாமல் வேண்டுமானால் பகவான் ரக்ஷித்துக் கொள்ளட்டும் என்று விக்ரீத பசு போல் இருந்த அம்பரீஷனின் பக்தியும் அனன்ய பக்தி தான். உடனே சுதர்சனம் கிளம்பவே அலறி அடித்துக்கொண்டு அங்கும் இங்கும் எங்கும் ஓடி, கைவிடப்பட்டு அஹம் பக்தபராதீன' என்று சொல்லி அவரை அம்பரீஷன் திருவடிக்கே திருப்பி விடவில்லையா?

இவ்வாறு அன்ய புத்தி இல்லாமல் ப்ரஹ்லாதன் போலும்,

அன்ய தெய்வ சம்பந்தம் இல்லாமல் கஜேந்திரன் போலும், அன்ய பலனைக் கருதாது பலி சக்கரவர்த்தி போலும், அன்ய பந்துக்களை விட்ட விபீஷணன் போலும், அன்ய சாதனத்தை விட்ட பாஞ்சாலி போலும், அன்ய ரக்ஷகனைக் கொண்டு ஆத்ம ரக்ஷணம் நாடாமல், ஆத்ம ரக்ஷணமும் உடையவன் இஷ்டமே என்ற அம்பரீஷன் போலும் அனன்ய பக்தி செய்யவேண்டும். இவர்கள்தாம் அனன்ய பக்தர்கள். இவர்களின் யோக ஷேமத்தை பகவான் வஹிக்கிறான்.

ப்ரஹ்லாதனுக்கு விஷமும் அம்ருதமாய் இருந்ததும், பரமசிவன் குடித்த காலகூட விஷமும் அம்ருதமாய் இருந்ததும், சீதா பிராட்டிக்கு தாரக மந்திரமே போஷகமாய் இருந்ததும், பஞ்ச பாண்டவர்களுக்கு அக்ஷய பாத்ரம் கிடைத்ததும், பக்த குசேலனுக்கு குபேர சம்பத்து தந்ததும் பகவான் செய்த யோகக்ஷேம நிர்வாஹம் அன்றோ!

நாமதேவர் வீட்டுக் கூரையை சுமந்ததும், ஜனாபாயுடன் மாவ ரைத்ததும் சுக்குபாய்க்காக வீட்டில் கட்டுண்டதும், கோர கும்பருக்காக மண்பானை செய்ததும், கபீர்தாஸருக்காகத் துணி நெய்ததும், ரவிதாஸருக்காக செருப்பு தைத்ததும், ஏகநாதர் வீட்டில் 12 வருடம் சிஷ்யனாய் இருந்ததும் பகவான் செய்த யோக க்ஷேமமே!

பரம பதத்திற்கு புண்ணியம் ஸாதனம் இல்லை, அனன்ய பக்தியே சாதனம். சாதனையால் சம்பாதித்தது எதுவும் வேலைக்குத் தக்கக் கூலியாக இருக்கும். இங்கேயோ பகவானே அனன்ய பக்தியை தானே தந்து, சத்சங்கத்தால் போஷித்து, அதன் இடர்களை தானே விலக்கி, அதன் பலனாய் தானே கிடைத்துவிடுகிறான். இதுவே அனன்ய பக்தியாகும்.



ஆதிசங்கரர் தர்மத்துக்கு உயிரூட்டவே உலகில் தோன்றினார். 32 ஆண்டுகளே வாழ்ந்த அவரது சாதனைகளின் அளவும் தரமும் நம்மை அதிசயிக்கச் செய்கின்றன.

அவர் தாமாக பல நூல்களை எழுதியுள்ளார். ஏற்கனவே இருந்த நூல்களுக்கு விளக்க உரைகளும் எழுதியிருக்கிறார். அவரது இதயத்தை நாம் புரிந்து கொள்ள உதவுகின்றன அவரது எழுத்துக்கள். ஆதி சங்கரரது நூல்கள் பண்டிதர்களுக்குத்தான் ஏற்றவை என்ற கருத்து தவறானது பண்டிதர்களுக்கு மட்டுமே புரியக் கூடியதாக 'அவர் தமது படைப்புக்களை விட்டுச் செல்ல வில்லை.

சமஸ்கிருத மொழி ஓரளவு தெரிந்தாலும் போதும் அவரது நூல்களை நன்கு புரிந்து கொள்ளலாம்.

கருத்துச்செறிவு உயர்ந்த நோக்கு அழகும் எளிமையும் நிறைந்த நடை ஆகியன அவர்களது நூல்களின் சிறப்புக்கள். அகந்தையும் கர்வமும் மனிதனது கீழ்க்குணங்களில் முன் நிற்பவவை என்கிறார் சங்கரர்.

"அகந்தை மனிதனை தீய வழிகளில் செல்லத்தூண்டுகிறது. செல்வம் படைத்தவனை முகஸ்துதி செய்வோர் சூழ்ந்து கொள்கிறார்கள். அவர்களது சொற்களை செல்வந்தன் நம்பத்தொடங்குகிறான். அவனது கர்வம் வளர்கிறது. தன்னைக் கடவுளாகவே எண்ணுகிறான். தனது செல்வத்தால் பிறருக்கு நன்மை செய்யாதிருப்பவனை விரைவில் துயரம் சூழ்கிறது.

அகந்தையும் கர்வமும் படிப்பாலும் வளர்கின்றன. அரைகுறைப் படிப்பாளி தனது அறிவைக் குறித்து கர்வம் கொள்கிறான். அனைத்தையும் கற்று விட வேண்டுமென்றார் ஒரு முனிவர். வாழ்நாள் முழுவதும் வேதம் பயின்றார் பல ஜன்மங்கள் எடுத்து வேதம் பயில்வதிலேயே செலவிட்டார். அவரது படிப்பு முழுமை பெற்றதாக வில்லை. பிரம்மா அம்முனிவரின் முன் தோன்றி மூன்று மலைகளைக் காட்டினார். வேதங்கள் மலையின் அளவு உள்ளன என்றும் முனிவர் இதுவரை கற்ற வேதங்கள் ஒரு கைப்பிடி மண்ணளவே என்றும் தெரிவித்தார்.

படிப்பைக் குறித்து கர்வம் அடைவது பொருந்துமா? படிப்புக்கு எல்லை இல்லை, செல்வம் நிலையற்றது என்பதால் நாம் சும்மா இருந்து விடலாமா? கர்வம், அகந்தை இன்றி நமது கடமைகளைச் செய்ய வேண்டும்" என ஆதிசங்கரர் கூறுகிறார். அவரது உபதேசங்கள் பண்டிதருக்கு மட்டுமின்றி பாமரருக்கும் பொருந்துவனவே.

(சிருங்கேரி ஜகத்குரு சங்கராச்சாரியார் கூறியவையிலிருந்து- திரு. தேனி முருகேசன்.)



(16-ஆம் பக்கத் தொடர்ச்சி)

செய்கிற என்றபடி. प्र என்னும் உபஸர்க்கத்தையும் கூட்டி ப்ரயோகித்ததனால் சண்டை செய்து வெற்றியை பெற்றதும் விவக்ஷிதமெனலாம். அந்தோ! இத்திருவடியின் கொடுமையை என் சொல்வோம்!; தாமரையிற் பிறந்த தேவி பிடிக்க ஸௌக்யமடைகின்ற தான் அவளுக்குப் பிறப்பிடமான தாமரைப் பூவிலே அன்பு பாராட்ட வேண்டியிருக்க அது செய்யாதே அத்தோடு சண்டை செய்கிறதே! என்று காட்டியபடி.

**यन्नूक्तेध्वजलस्यञ्ञं** - 'இன்னார் தாழ்ந்தார், இன்னார் உயர்ந்தார்' என்று வாசி பாராதே அனைவர்க்கும் புகலாயிருக்கும் தன்மையைச் சொன்னபடி. பக்தி யென்பது ஒன்று நெஞ்சிலே பிறக்க வேண்டு மத்தனை; அது பிறந்துவிட்டால் மற்றைப்படி ஜன்ம வ்ருத்தாதிகளிலுள்ள தாழ்வு அப்ரயோஜகரம் பகவத் பரிக்ரஹத்திற்கு என்று காட்டியபடி.

**यद्दूत्यप्रसङ्गोत्सुकमपि** - இங்கு **दूत्यप्रसङ्गोत्सुकं** என்ற விசேஷணம் மிக அழகு. எம்பெருமான் தனது திருவடியை நோக்கி "பாதமே! நீ அமரருடைய சென்னியிலே வீற்றிருக்க விரும்புகிறாயா? அடியவர்க்காகத் தூது செல்லப் புறப்படவிரும்புகிறாயா?" என்றால் தூது செல்வதையே பெறாப்பேறாக நினைத்து அது தன்னிலே சாலவும் காதல் கிளர்ந்திருக்குமாம். தூது போவதென்ற வார்த்தை யுண்டாகுமளவிலேயே குணாலக் கூத்தடிக்குமாம், தூது செல்ல அவசரம் கிடைப்பதெப்போதோ என்று எதிர்ப்பார்த்திருக்குமாம்.

**तद्विष्णोः श्रीरङ्गिणः परमं पदं नः मङ्गलं वहतु** - இப்படிப்பட்ட பெரிய பெருமானது சிறந்த திருவடியானது **योगक्षेमं वहाम्यहं** என்று வாயோலை செய்து கொடுத்த ப்ரதிஜ்ஞையை நம் திறத்திலே நிர்வஹிக்க வேணுமென்கிறார்.

**லீலாசுகரின் க்ருஷ்ண பக்ஷபாதம்:**

லீலாசுகர் க்ருஷ்ண கர்ணாம்ருதத்தில் பின்வரும் அழகான ச்லோகத்தை அமைத்துள்ளார்.

रामो नाम बभूव हुं तदबला सीतेति हुं तौ
पितु-
र्वाचा पञ्चवटीतटे विहरतस्तामाहरद्रावणः।
निद्रार्थं जननीकथामिति हरेर्हुङ्कारतः शृण्वतः
सौमित्रे क्व धनुर्धनुर्धनुरिति व्यग्रा
गिरः पान्तु वः ॥ (२-७१)

குழந்தையைத் தூங்கப் பண்ணுவதற்காக யசோதை இராமனின் கதையை சொல்லி வருகிறாள். இராமன் என்று ஒருவனிருந்தான், அவன் பத்நி ஸீதையென்பாள், அவ்விருவரும் தசரதனின் கட்டளைப்படி காட்டுக்குச் சென்று பஞ்சவடியில் விஹாரம் செய்து கொண்டிருந்தனர். இதையெல்லாம் ஹூம், ஹூம் என்று ஹூம்கூட்டிக் கேட்டிக் கொண்டிருந்த கண்ணன், அடுத்தபடியாக ஸீதையை இராவணன் அபஹரித்தான் என்று செவியுற்றதும், 'இலக்ஷ்மணா! என் வில் எங்கே, எங்கே, எங்கே' என்று உரக்கக் கூவினானாம். அந்த வார்த்தைகள்

# சித்திரைப் பெண்ணே வா!

சித்திரைப் பெண்ணே வாவா
முத்திரைப் பதிக்க வாவா
நித்திரை அகற்ற வாவா
நித்தமும் காக்க வாவா

சத்தியம் உரைக்க வாவா
முத்தியை அருள வாவா
சித்தியை கூட்ட வாவா
சித்தம் சிறக்க வாவா

எத்திக்கும் இறையாய் வாவா
தந்திடும் மழலையாய் வாவா
புத்தியும் புகழாய் வாவா
காத்திடும் அன்பாய் வாவா

நித்திய செழிப்பாய் வாவா
பூத்திடும் வனப்பாய் வாவா
கோத்திடும் இன்பமாய் வாவா
சாத்திடும் மாலையாய் வாவா

தத்துவம் விளக்க வாவா
ஏத்திடும் நலனாய் வாவா
சுத்தமாம் நிலைக்கு வாவா
உத்தமர் உயர்ந்திட வாவா

மொத்தமாய் விளங்க வாவா
சத்தினை சேர்க்க வாவா
இத்தரை ஓங்க வாவா
வித்தகத் தமிழாண்டே வாவா

— கவிஞர் சோமசுந்தரப் பெருமாள்-தங்கவயல்.

நம்மைக் காப்பாற்றட்டும் என்கிறார்.

தானும் இராமனும் வெவ்வேறல்ல என்பதைக் கிருஷ்ணனே காண்பித்ததாக இவ்விதம் அநுபவித்த லீலாசுகர் தமது பக்ஷபாதத்தை விடவில்லை.

विहाय कोदण्डशरौ मुहूर्तं
गृहाण पाणौ मणिचारु वेणुम् ।
मायूरबर्हं च निजोत्तमाङ्गे
सीतापते त्वां प्रणमामि पश्चात् ।।(३-९४)

ஸீதாபதியான இராமனே! முதலில் உமது கையிலுள்ள கோதண்டமென்ற வில்லையும் அம்புகளையும் விட்டுவிட்டு திருக்கைகளில் மணி மயமான அழகான புல்லாங்குழலை தரிப்பீராக; தவிரவும் திருமுடியில் வீரனின் கிரீடத்தைத் தவிர்த்து மயில் தோகை இறகை அணிந்து கொள்ளும்; பிறகு அடியேன் நும்மை ஸேவிக்கிறேன் என்றபடி.

**க்ருஷ்ணாவதாரத்தில் ஆழ்வார்களின் ஈடுபாடு :**

'பிறந்தவாறும்' (திருவாய்மொழி 5-10) ப்ரவேசத்தில் உள்ள பின்வரும் ஈட்டு பங்க்திகள் ஈண்டு அநுபவிக்கத் தக்கன.

'இவ்வாழ்வார்களெல்லாரும் க்ருஷ்ணாவதாரமென்றவாறே போர மண்டியிருப்பார்கள்; இதற்கு ஹேது வென்?' என்று பட்டரைக் கேட்க, 'ஒருவனுக்கு துக்கம் சில நாள் கழிந்தால் பொறுக்கலாம், அணித்தானால் ஆறியிருக்கப் போகாதிறே. அப்படியே அல்லாத அவதாரங்களைப் போலன்றிக்கே, ஸம காலமாகையாலே, 'ஒரு செவ்வாய்க்கிழமை முற்படப் பெற்றிலோம், பாவியேன்! பல்லிலே பட்டுத் தெறிப்பதே' என்னும் இழவாலே வயிறெரித்தலேயாயிருக்கும்' என்று அருளிச் செய்தார். இனித்தான் இராமாவதாரத்தில், தமப்பன் சம்பராந்தகனாய் ஏக வீரனாயிருப்பானொருவன், பிள்ளை

கள் தாங்கள் ஆண் புலிகள், குடி தானே வன்னிய மறுத்திருப்பதொரு குடி; இவையெல்லாம் மிகைபடி, குணத்தாலே நாட்டையெல்லாம் ஒரு மார்வெழுத்தாக்கிக் கொண்டிருப்பர்கள். ஆகையால் எதிரிகள் என்கிற சப்தமுமில்லை. இங்கு அங்ஙனன்றிக்கே, ஸ்ரீப்ருந்தாவனத்திலே எழும்பூண்டுகளாகப்பட அஸுர மயமாயிருக்கும். ரக்ஷகரானவர்கள் ஓரடி தாழநிற்கில் பாம்பின் வாயிலே விழும்படியாயிற்று இவன்தன் படிகளிருப்பது. அப்படியானால்வயிரெறியாதே செய்வதென் இவர்கள்? அக்காலத்திலே உணர்ந்து நோக்கப் பெற்றிலர்கள், அவ்விழவுக்கு இன்றிருந்து நோவுபடுகிறார்கள்—என்று.

**இராமனும் க்ருஷ்ணனும் ஒன்றே:**

'மனத்துக்கினியானைப் பாடவும் நீ வாய் திறவாய்' என்ற திருப்பாவைக்கு முன்பு இராமனின் ஏற்றத்தைக் கூறுவதாக பொருள் கண்டோம். அதற்கே வேறு விதமாகவும் பொருளுரைப்பதை இப்போது காண்போம்.

'சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியானைப் பாடவும்' என்று இராம வ்ருத்தாந்தம் சொன்னதால் 'க்ருஷ்ண குணங்களே வெள்ளங் கோத்திருக்கும் இத்திருவாய்ப்பாடியிலே க்ருஷ்ண கதையைவிட்டு இராம கதையைச் சொல்லுவது நீதியோ? **रामो रामो राम इति प्रजानाम भवत्कथा:** என்ன நின்ற அயோத்தியில் க்ருஷ்ண நாமம் சொன்னால் ஸஹித்திருப்பார்களோ? நந்தன் மைந்தனான அசோதையிளஞ்சிங்கத்தின் சீர்மல்குமிப் பாடியிலே இராமன் பேர் சொன்னால் ஸஹித்திருக்குமோ? அநீதியான இப்பெயரை இங்குப் பேசுவரார்?' என்று சிவிட்கென்றிருந்தாயாகில், இராம க்ருஷ்ணர்களின் அபேதத்தை இங்கு அறியாதாரில்லை; அனைத்தில்லத்தாரும் அறிந்துள்ளார்கள் காண்—என்றதாக. நாம் சிற்றிலிழைக்க அதைச் சிதைத்தவன் கண்ணனாயிருக்க 'சீதை வாயமுதமுண்டாய்! எங்கள் சிற்றில் நீ சிதையேல்' (நாச்சியார் திருமொழி 2-10) என்றிலோமோ? நம்முடைய வளை துகில்களைக் கைக்கொண்டு வேண்டவும் தாராதான் கண்ணனாயிருக்க 'இரக்கமேல் ஒன்றுமிலாதாய் இலங்கையழித்த பிரானே!' (நாச்சியார் திருமொழி 3-4) என்றிலோமோ? ஆக, தென்னிலங்கைக் கோமானைச் செற்றவனும் நம் மனத்துக்கினிய கண்ணனும் வெவ்வேறு வ்யக்திகளின்றிக்கே ஒரு வ்யக்தியேயென்பதை அனைத்தில்லத்தாரும் அறிந்திருக்கையாலே சீறுமாறு என்னாதே கடுக வந்து சேர் என்கிறபடி.

**அர்ஜுனனும் ஹநுமானும்:**

கண்ணனையே தெய்வமாகக் கொண்ட அர்ஜுனனும் இராமனையே பரதேவதையாகக் கொண்ட ஆஞ்ஜநேயரும் ஒரு ஸமயம் ஸந்தித்தார்களாம். இருவரும் வார்த்தா லாபம் செய்யும்போது அர்ஜுனன் கண்ணனின் மேன்மைகளை மொழிந்திட அநுமன் இராமனின் குணங்களைப் புகழ்ந்திட்டனன். அப்போது அவ்விருவருக்கும் எதிரே ஓர் உருவம் தோன்றிற்று. அது க்ருஷ்ணனாகவும் இராமனாகவும் மாறி மாறித் தோற்றமளித்தது. க்ருஷ்ணனாகத் தோன்றும்போதெல்லாம் அர்ஜுனன் பணிவதும், இராமனாகத் தோன்றும் போதெல்லாம் மாருதி வழிபடுவதுமாகச் சிறிது நேரம் செல்ல, கடைசியில் அவ்வொருவுருவமே க்ருஷ்ணனாகவும் இராமனாகவும் இருவருக்கும் தோன்றி இராமன் வேறு க்ருஷ்ணன் வேறு என்ற அவர்களின் ப்ரமத்தைப் போக்கிற்று என்பர்.

அரசாணி பாலை வேங்கடாத்வரி இராகவயாதவீயம் என்ற ஒரு அநுலோம ப்ரதிலோம காவ்யம் அருளி அதற்கு உரையும் தாமே அருளியுள்ளார். நேராக வாசிக்கும் போது அந்த காவ்யம் இராமனின் சரிதையாகவும் பின் முன்னாக வாசிக்கும் போது க்ருஷ்ணனின் பாரிஜாத அபஹரணத்தை வர்ணிப்பதாகவும் மிகவும் சாதுரியமாக அமைக்கப்பட்டுள்ளது என்பது இங்கு உணர்தல் நன்று.

**அபேத ச்லோகம்:**

கடைசியாக இராமனையும் க்ருஷ்ணனையும் சிலேடையினால் ஒன்

## விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம். ஓ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி. தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத் தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத் தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

றாகக் காண்பிக்கும் கவியின் அழகான சித்திரத்தைக் காண்போம்.

यः पूतनामारणलब्धकीर्तिः
काकोदरो येन विलीनदर्पः ।
यशोदयालङ्कृतमूर्तिरव्यात्
पतिर्यदूनामथवा रघूणाम् ॥

இது இராமன் விஷயமாகவும் க்ருஷ்ணன் விஷயமாகவும் அமைந்துள்ளது. சில பதங்களை வெவ்வேறாகப் பிரித்தும், சில பதங்களுக்கு வெவ்வேறு பொருள் கூறியும் இரண்டு எம்பெருமான்கள் விஷயமாகவும் இதை அநுஸந்திக்க வேண்டும்.

**पूतनामा**-பரிசுத்தமான திருநாமத்தையுடையவன். இராமா என்று எவன் அவனுடைய நாம தேயத்தைச் சொல்லுகிறானோ அவனுடைய நம்மன் போலே வீழ்த்தமுக்கும் பாபங்களெல்லாம் தூறு பாய்ந்து சும்மனாதே கைவிட்டு ஓடுமல்லவா?' 'ரா' என்ற எழுத்தை வாய் திறந்து சொல்லுமளவிலே பாபங்களனைத்தும் வாய் வழியாக வெளி வருகின்றன. 'ம' என்ற எழுத்தைச் சொல்லுமளவில் இரண்டு உதடுகளையும் மூட வேண்டி இருக்கிறபடியால் வெளிக் கிளம்பின பாபங்கள் மறுபடியும் உள் நுழைய முடியாமல் தவிர்த்து எங்கேயோ சென்று விடுகின்றன. பாபங்கள் நுழையாமல் இருக்கக் கதவு போடுவது போல் அமைந்திருக்கிறது என்று ஓர் உபநிஷத் கூறிற்று. கம்பரும் இதை அடியொற்றி,

நன்மையும் செல்வமும் நாளும்
நல்குமே
திண்மையும் பாவமும் சிதைந்து
தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித்தீருமே
இம்மையே ராம என்றிரண்டெழுத்
தினால்

என்று பகர்ந்தார்.

**रणलब्धकीर्तिः** - யுத்தத்தில் புகழ் பெற்றவன். இமய மலை, மந்தரம், மேரு முதலியவற்றைத் தன் இருகைகளாலேயே தூக்கி விளையாடத் திறமை பெற்ற இராவணனும் அன்றோ போர்க்களத்தில் இராம பாணத்தால் அடிபட்டும், தேரில் வீழ்த்தப்பட்டும், மூர்ச்சை அடைந்தும், தேர்ப்பாகனால் இலங்கைக்கு அடைவிக்கப்பட்டும், பிறகு இராமனின் பராக்ரமத்தைப் புகழ்ந்து பேசினானன்றோ? **सारथिहृतरथ सत्रप शात्र व सत्यापित प्रताप!** என்று ஸ்வாமி தேசிகனும் இதை மஹாவீர வைபவத்தில் அநுஸந்தித்துப் போந்தார்.

இனி இந்தப் பதத்தைக் கண்ணன் விஷயமாக யோஜிப்போம் **पूतना मारण लब्ध कीर्तिः** என்று பிரித்துக் கொள்ள வேண்டும். பூதனையை ஸம்ஹாரம் செய்ததினால் உண்டான புகழை யுடையவன் என்றபடி. ஸ்ரீ ராமாவதாரத்தில் மித்ர பாவனையோடு வந்தவனையும் விடாமல் அவனுக்கு அபய ப்ரதானம் செய்வேன் என்றவன் மாத்ரு பாவனையோடு வந்த பூதனைக்கும் அபய ப்ரதானம் செய்து நற்கதியளித்தான் என்றால் வியப்பில்லை.

**काकोदरो येन विलीन दर्पः** - **अदरः काकः येन किलीन दर्पः** பயமற்ற காகாஸுரனின் செருக்கு எந்த இராமனால் போக்கடிக்கப்பட்டதோ என்று பொருள். இனி, கண்ணன் விஷயமாக **काकोदरः** என்பது ஒரே சொல். இது க்ருஷ்ண ஸர்ப்பத்தைச் சொல்லும். அதனுடைய கர்வம் கண்ணனால் நீக்கப்பட்டது.

**यशोदयालङ्कृतमूर्तिः** - தானப் புகழாலும் தயையாலும் விளங்குகிற திருமேனியையுடையவன் இராமபிரான். இங்கே தயையுடன் சொன்ன புகழ் கொடைப் புகழ். **धनदेन समः त्यागे** குபேரனுக்கு ஸமமானவன் கொடுப்பதில் என்றார் வால்மீகி. தயையே உருவெடுத்தவன் இராமன் என்பதை இராமாயணத்தில் பல இடங்களில் காணலாம். "இன்று போய் நாளை வா" என்று இராவணனிடம் காட்டிய தயைக்கு மேற்பட்டதொன்றும் கிடையாதன்றோ?

இனி, கண்ணன் விஷயத்தில் பார்ப்போம். யசோதையினால் அலங்கரிக்கப்பட்ட திருமேனியையுடையவன் என்று பொருள்.

இத்தகைய ரகுபதியான ஸ்ரீராமனும் யதுபதியான ஸ்ரீக்ருஷ்ணனும் நம்மைக் காக்க வேண்டும் என்று இந்தக் கவிதை சொல்லித் தலைக்கட்டுகிறது. இந்த ப்ரார்த்தனையைக் கொண்டே இக்கட்டுரையை முடிப்போமாக.



# ஸ்ரீ வேதாந்த தேசிகர் ஓர் தரிசனம்



இன்றைக்கு சுமார் 700 ஆண்டுகளுக்கு முன்பு காஞ்சிமாநகரத்தில் விளக்கொளி பெருமாள் சந்நிதி இருக்கும் தூப்புல் என்ற சிறு கிராமத்தில், அனந்தஸூரி, தோதாரம்மை திவ்ய தம்பதிகளுக்கு திருவேங்கடமுடையானது திருவருளால் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அது திருவேங்கடேசன் அவதரித்த புரட்டாசித் திருவோணத்திலேயே அவனருளால் பிறந்தமையால், வேங்கடேசன் என்றே அதற்கு நாமகரணம் செய்தனர். குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தது. தனது ஐந்தாவது வயதிலேயே வேங்கடேசனுக்கு முறைப்படி நடக்கும் அக்ஷராப்யாஸமும் நடந்தேறியது.

அது சமயம், வேங்கடேசனின் அம்மான் கடாம்பி அப்புள்ளார் என்பவர், காஞ்சிபுரத்தில் ஸ்ரீ தேவராஜன் ஸந்நதியில் நடாதூர் அம்மாள் என்பவரிடம் வேதாந்த காலக்ஷேபம் செய்து வந்தார். ஒரு நாள் தன் மருமகனையும் காலக்ஷேப கோஷ்டிக்கு அழைத்துச் சென்றார் அப்புள்ளார். குழந்தையின் முகப்பொலிவையும் சொல்வன்மையும் கண்ட நடாதூர் அம்மாள் குழந்தையை அருகில் அழைத்து "ஸ்ரீ வைஷ்ணவம் தழைத்தோங்கவும், கற்றோர் புகழும்படி ஸகல க்ஷேமங்களுக்கும் பாத்திரனாவாய்" என்று வாழ்த்தியருளினார்.

அப்புள்ளாரும் தம் ஆசாரியரின் ஆணைப்படி அந்தக் குழந்தைக்கு முறைப்படி கல்வி கற்பிக்கும் முழுப் பொறுப்பையும் தாமே ஏற்றார். குழந்தை வேங்கடேசனுக்கு உபநயனம் செய்வித்து வேதாத்யயனமும் செய்வித்தார். சிறுவனான வேங்கடேசனும் மிக்க வினயத்துடன், சிரத்தையுடனும் அம்மானிடம் காவிய, நாடக அலங்கார, தர்க்க, வியாகரண, மீமாம்ஸாதி ஸகல சாஸ்திரங்களையும் படிப்படியாகக் கற்று தேர்ச்சி பெற்றான். பிறகு ஸ்ரீ பாஷ்யம்,


திரு. அ. ந. மாதவன்,

பெங்களூர்.


கீதா பாஷ்யம், பகவத் விஷயம் முதலிய வேதாந்த சித்தாந்த நூல்களையெல்லாம் தமது இருபதாவது ஆண்டிற்குள் கசடறக் கற்றுத் தெளிந்தார் தேசிகன். இவரது அறிவுத் திறனையும், அடக்கத்தையும் கண்டு கற்றோரும் மற்றோரும் வியந்தனர். அப்புள்ளாரும் மருமகனுடைய மேதாவிலாஸத்தைக் கண்டு ஸ்ரீ ராமாநுஜரால் பாதுகாக்கப்பட்ட ஸ்ரீ விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை திக்கெட்டிலும் பரப்பக்கூடிய திறமையுள்ளவர் இவரே என்று முடிவு செய்தார்.

பிறகு, இவருக்கு மேன்மேலும் ஞானபலம் அதிகரிக்கவேண்டுமென்ற எண்ணத்தில், வேதஸ்வரூபியான கருத்மானுடைய அருள்தரக்கூடிய கருட மந்த்ரத்தை உபதேசித்தார். ஸ்ரீ தேசிகன் இந்த மந்த்ரத்தை

# விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

ஜபித்து பெரிய திருவடியின் அனுக்ரஹம் பெறுவதற்கு உகந்த இடம் எது என்று தேடி திவ்யதேச யாத்திரை செய்யும் காலத்தில் திருவஹீந்திர புரத்திற்கு எழுந்தருளினார். அங்கே ஸ்ரீ தேவநாதன் ஸந்நிதிக்கு எதிரிலுள்ள 'ஔஷதாத்ரி' என்ற சிறிய மலை அதற்குத்தக்கதாக இருந்தது. அந்த மலையில் கருட மந்த்ரத்தை ஜபித்தார். கருடபகவான் மகிழ்ச்சியடைந்து ப்ரத்யக்ஷமானார். பிறகு ஸகல வித்யாதி தேவதையான ஸ்ரீ ஹயக்ரீவனை ஸாக்ஷாத்கரிக்கக் கூடிய ஸ்ரீ ஹயக்ரீவ மந்த்ரத்தை உபதேசம் செய்து ஒரு ஹயக்ரீவ விக்ரஹத்தையும் கொடுத்து மறைந்தார்.

ஸ்ரீ தேசிகன் அதே ஔஷதகிரியில் விரதம் பூண்டு ஸ்ரீ ஹயக்ரீவனை ஆராதித்துக் கொண்டும் ஹயக்ரீவ மந்த்ரத்தை ஆயிரமாயிரம் தடவை ஸதா ஜபித்துக் கொண்டும் அதே தியானத்தில் இருந்தார். ஒரு நாள், ஸ்ரீ ஹயக்ரீவன் ப்ரத்யக்ஷமாய்த் தமது பரிமுகத்திலிருந்து லாலாமிருதம் என்ற ஞானமிருதத்தை எடுத்து ஸ்ரீ தேசிகனுக்கு ஊட்டியருளினார். அதை அருந்தியதே வியாஜமாக ஸ்ரீ தேசிகனுடைய திருவாக்கிலிருந்து கவிதாப்ரவாஹம் பெருக்கெடுத்தோடியது.

முதன் முதலில் ஜ்ஞாநாதி தேவதையான ஸ்ரீ ஹயக்ரீவனைப்பற்றியும் ஜ்ஞாநாசார்யனான ஸ்ரீ கருடபகவானைப்பற்றியும் ஸ்தோத்திரங்களை இயற்றினார். இப்படிப் பல காலம் திருவஹீந்திரபுரத்திலும், சில காலம் காஞ்சி, ஸ்ரீரங்கம், திருமலை முதலிய திவ்ய தேசங்களிலும் எழுந்தருளியிருந்து, அந்த அந்த திவ்ய தேசத்து எம்பெருமான்களைத் தாம் இயற்றிய ஸ்தோத்திரங்கள் மூலமாகவும், பாசுரங்கள் மூலமாகவும் மங்களாசாஸனம் செய்து வந்தார்.

மற்றும் தாம் செல்லுமிடமெல்லாம், சீடர்களுக்கு பஞ்ச ஸம்ஸ்காரமும் மந்த்ரோபதேசமும் செய்ததுடன் ஸம்ப்ரதாய கிரந்த காலக்ஷேபங்களையும் ஸாதித்து வந்தார்.

ஸ்ரீ தேசிகன் அருளிச் செய்த கிரந்தங்களின் எண்ணிக்கை பின்வருமாறு.

| | |
|---|---|
| 1. ஸ்தோத்திரங்கள் | 28 |
| 2. வேதாந்த கிரந்தங்கள் | 14 |
| 3. வியாக்யாந கிரந்தங்கள் | 8 |
| 4. ரஹஸ்ய கிரந்தங்கள் | 31 |
| 5. தமிழ்ப் பிரபந்தங்கள் | 24 |
| 6. காவியங்கள் | 1 |
| 7. நாடகங்கள் | 1 |
| 8. அநுஷ்டானக் கிரந்தங்கள் | 2 |
| | 112 |

ஸ்ரீ தேசிகனின் தனிப்பெருமை :

1. தம் வாழ்நாள் முழுவதும் சற்றும் ஒய்வில்லாமல் வடமொழியிலும் தென்மொழியிலும் 112 கிரந்தங்களை இயற்றினார்.

2. ஓர் இரவின் ஒரு யாம காலத்திற்குள் (அதாவது 3 மணி கால கட்டத்தில்) ஸ்ரீ ரங்கநாத பாதுகையைப் பற்றி "பாதுகா ஸஹஸ்ரம்" என்னும் ஆயிரம் சுலோகங்களை இயற்றினார்.

3. பணத்தையோ புகழையோ விரும்பாமல் எளிய வாழ்க்கை நடத்தினார். வித்யாரண்யர் மூலமாக வந்த அரசனின் அழைப்பையும் ஏற்காமல் 'வைராக்ய பஞ்சகம்' அருளினார்.

4. 'வேதாந்தாசார்யர்' என்ற விருதை அரங்கநாதனாலும் 'ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர்' என்ற விருதை அரங்க நாச்சியாராலும் அநுக்ரஹிக்கப்பெற்றார்.

5. ஸ்ரீ தெய்வநாயகன் திருவுள்ளப்படி பாகவதர்கள் மூலம் 'கவிதார்க்கிக ஸிம்ஹம்' என்ற விருதைப் பெற்றார்.

6. இவ்வளவு ஞானமும், அனுஷ்டானமும், வைராக்யமும், பக்தியும் இருந்தும் சிறிதும் கர்வமோ, கோபமோ கொள்ளாமல் எல்லோருடனும் அன்பாகப் பழகினார்.

7. தம்மை அவமதித்தவர்களையும் அவதூறு பேசாமல், மாறாக, போற்றி நடந்தார். ஒரு நாள் இவருடைய பெருமையைக் கண்டு பொறாமை கொண்ட சிலர் இவர் செல்லும் வழியில் பழைய செருப்புத் தோரணம் கட்ட, அது அவர் தலையில் இடிக்க, 'பாகவதர்களின் திருவடிச்சோடுகளே நாங்கள் உய்வதற்குப் பற்றுக்கோல்' என்று கூறி உண்மை வைணவத்தை உலகிற்கு அறிவுறுத்தினார்.

இப்படி ஞானத்திற்கும், அனுஷ்டானத்திற்கும், வைராக்யத்திற்கும் நிதியாய்—ஆதர்சமாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமந்நிகமாந்த மகாதேசிகன் அவதாரத்தையும், பெருமைகளையும் மனத்தில் கொள்பவர்களுக்கு ஸகல க்ஷேமங்களும், ஐஸ்வர்யங்களும் உண்டாகுமென்பதில் சிறிதளவும் சந்தேகமில்லை. அவர்தம் ஓர் தரிசனம், ஓர் பிறவியைக் கடந்தது போல !

ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் திருவடிகளே

சரணம்

# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் யாத்திரிகர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மின்சாரம் மற்றும் தண்ணீர் வசதிகளுடன் கூடிய அறைகள் கொண்ட சத்திரங்கள் உள்ளன. இத்தங்கு வசதிகளைப் பெற திருமலை பேருந்து நிலையத்திற்கு அருகே உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தை அணுகவும். மேலும் யாத்திரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வகையில் கொட்டகைகள் மற்றும் கூடங்களும் உண்டு. கட்டணம் செலுத்திப் பெறப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில் செய்து தரப்படும்.

முன்கூட்டியே தங்கு வசதிகளுக்காக பணம் செலுத்திப் பெயர் பதிவு செய்து கொள்ளும் யாத்திரிகர்கள் தங்கு வசதிகளுக்கான கட்டணத்தை காசோலை (D.D.) மூலம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக் காசோலையினை அல்லது எம்.ஓ. ரசீதினை திருமலைக்கு வரும் தேதி, தங்கும் நபர்களின் எண்ணிக்கை, செலுத்திய தொகை ஆகிய விவரங்கள் அடங்கிய கடிதத்துடன் இணைத்து குறைந்தது பத்து நாட்களுக்கு முன்பேயே, உதவி செயலாட்சித் தலைவர் (Asst. Executive Officer) வரவேற்பு I (Reception I) தி.தி.தே. திருமலை-517504 எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்து ஆங்கிலத்தில் இருத்தல் அவசியம்.

## தங்கு வசதிகளுக்கான கட்டண விவரங்கள் :

1) ஹில் வ்யூ பாதிக் குடில்கள், சங்கு மிட்டா, சேஷாத்ரி நகர், அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்

| | | |
|---|---|---|
| ஒரு பகுதி (ஹீட்டர் இல்லாதது) | ரூ. | 15/- |
| எச்.வி.டி.சி. அறைத்தொகுதிகள் (Suites) (ஒவ்வொன்றும்) ஹீட்டர் உள்ளது | ரூ. | 25/- |
| எச். வி. சி. விருந்தினர் விடுதியின் பெரிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) | ரூ. | 50/- |
| எச்.வி.சி. விருந்தினர் விடுதியில் சிறிய அறைத் தொகுதி (ஹீட்டர் உள்ளது) | ரூ. | 25/- |

மேற்கூறிய தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்தல் வேண்டும்.

2) மங்களாபாவி குடில்கள், டி. பி. சி. மூன்றாவது வரிசை முதலியன

| | | |
|---|---|---|
| டி. பி. வெளிப்பகுதி குடில்கள் (ஹீட்டர் உள்ளது) | ரூ. | 60/- |
| வி.வி.சி., எம்.பி.சி. 31 மற்றும் 26 | ரூ. | 70/- |
| எம்.பி.சி. (ஹீட்டர் உள்ளது) | ரூ. | 50/- |
| டி.பி., ஏ.டி.சி. அறைத்தொகுதிகள் (ஹீட்டர் உள்ளது) | ரூ. | 15/- |
| ஏ. டி. சி. கீழ்த்தளம், முதல் தளம், 'ஏ' 'பி' 'சி' மற்றும் 'டி' பகுதிகள் (ஒவ்வொன்றும்) | ரூ. | 30/- |

ஆர்ஜித சேவை செய்யும் கிருஹஸ்தர்களுக்கு மட்டுமே முன்பதிவு.

3) எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றும் என். ஜி. ஜி. விடுதியில் உள்ள

| | | |
|---|---|---|
| ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் | ரூ. | 50/- |

முன்பதிவு இல்லை.

4) பயணிகள் மாளிகையின் உட்புறக்

| | | |
|---|---|---|
| குடில்கள் | ரூ. | 70/- |
| சிறப்பமைப்புக் குடில்கள் | ரூ. | 100/- |
| எச். ஆர். ஜி. குடில்கள் | ரூ. | 250/- |

முன்பதிவு இல்லை. காலியாக இருப்பின் ஒதுக்கப்படும்.

5) ஹில் வ்யூ சொகுசு குடிலில் மோடி பவன்

| | | |
|---|---|---|
| ஒரு அறைத்தொகுதிக்கு | ரூ. | 250/- |
| ஸ்ரீ நிகேதன் விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒவ்வொன்றுக்கும் | ரூ. | 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. | 750/- |
| இந்திரா விருந்தினர் விடுதி அறைத்தொகுதி 1க்கு | ரூ. | 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. | 1000/- |
| பாலகுடீரம் ஒரு அறைத்தொகுதி | ரூ. | 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. | 1500/- |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒன்று | ரூ. | 250/- |
| முதல் தளத்தில் பெரிய அறைத் தொகுதி மற்றும் கீழ்த்தளத்தில் அறைத்தொகுதி (ஒன்று) | ரூ. | 750/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. | 2500/- |
| கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதனம் பொருத்தப்பட்டது) அறைத்தொகுதி (ஒன்று) | ரூ. | 500-/ |
| ஸ்ரீநிவாசா நிலையம் அறைத்தொகுதி (ஒன்று) | ரூ. | 500/- |

ஸ்ரீநிவாசா நிலையம்
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

வித்யா சதன்
பெரிய அறைத் தொகுதி ரூ. 750/-
,, மற்றைய அறைத்தொகுதி ரூ. 500/-

கோதாவரி சதன்
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

காம்பெல் விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

முன்பதிவு இடையாது. காலியாகும் தங்கு வசதிகளைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

தயைகூர்ந்து "உதவி செயலாட்சித் தலைவர், (வரவேற்பு) தி. தி. தே., திருமலை" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

6) திருமணக் கூடங்கள் :

சங்குமிட்டா குடில்கள் கிழக்கு
எண். 272, 260, 266, 267 ரூ. 100/-

டி.பி. குடில் எண். 71 வரிசை III
எண்கள் 136 மற்றும் 152 ரூ. 100/-

ரூயா குடில், கோகினேனி குடில்
மற்றும் ஏ.டி.சி. எண். 99 ரூ. 100/-

சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 100/-

ஸ்ரீ சீதாராம திருமண மண்டபம் ரூ. 1000/-

முன்பதிவுக்கு உதவி செயலாட்சித் தலைவர், (ஆர்). தி. தி. தேவஸ்தானம், திருமலை எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ராம் பகீச்சா விருந்தினர் விடுதி
சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ரூ. 50/-
(அறைத் தொகுதி ஒன்றிற்கு)

விதிகள் :-
* ஒரு நாள் என்பது இடவசதி வழங்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்கள்.
* தேவைப்படும் இடவசதி வழங்கப்பட முடியாவிட்டால் வேறு தங்கு வசதி செய்து தரப்படும். இதனால் செலுத்தப்பட்ட தொகை அதிகமாக இருப்பின் வித்தியாசப்படும் தொகை திருப்பித் தரப்படும்.
* கூட்டம் அதிகமாக இருக்கும் நிலைகளில், தங்கு வசதி ஒருநாளைக்கு மட்டுமே வழங்கப்படும்.
* ஒதுக்கப்பட்ட கால நேரத்திற்கு மேலாக தங்கு வசதிகளைப் பயன்படுத்தினால், நிர்ணயிக்கப்பட்ட தொகையினைப் போல் மூன்று மடங்கு தொகை அபராதமாக வசூலிக்கப்படும்.
* மேலே குறிப்பிட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக்கூடியன.

# திருப்பதியில் தங்கு வசதிகள்

## இலவச தங்கு வசதிகள் :

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடக்குப் புறத்தில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜ தர்மசாலை மற்றும் ஸ்ரீ கோதண்டராம தர்மசாலைகளில் மேஜை, நாற்காலி வசதி இல்லாத ஆனால் சமையல் செய்து கொள்ளும் வசதிகளுடன் கூடிய இட வசதிகள் உள்ளன. யாத்திரிகர்கள் இவ் இடவசதிகளுக்காக தர்மசாலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20991

## மேஜை, நாற்காலிகளுடன் கூடிய இடவசதிகள் :

ஸ்ரீ வேங்கடேஸ்வரா தர்மசாலை (இரயில் நிலையத்திற்கு எதிரில்)

சிறியது ரூ. 20/- பெரியது ரூ. 30/- நான்கு படுக்கைகளைக் கொண்டது ரூ. 40/-
கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20103.

இரயில் நிலையத்திற்கு வடக்குப்புறம் உள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :
அறைத்தொகுதி ஒன்று ரூ. 30/-

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) திருப்பதி' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி எண். 20166.

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்ச்சாதன வசதியுடன் கூடியது) (சித்தூர் சாலையில் உள்ளது)
பெரிய அறைத் தொகுதி ரூ. 65/- : சிறிய அறைத் தொகுதி ரூ. 40/-
திருப்பதியிலுள்ள உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலைபேசி எண். 20103.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

மிக மலின சித்தமுள்ளவர்களுக்கும் ஆழ்ந்த அறிவில்லாதவர்களுமான சாதாரண ஜனங்கள் நற்கதி பெறுமாறு சில மதங்களை ஸ்தாபிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். ஆதிசங்கரர் சைவம், சாக்தம், காணாபத்யம், வைஷ்ணவம், கௌமாரம், சௌரம் இவைகளை ஸ்தாபித்தார். ஆறு மகா பண்டிதர்களும் இந்த ஆறு மதங்களையும் தழுவி பிரசாரம் செய்யச் சென்றனர்.

பதரியில் ஜோதிர் மடம் :

பதரி இமாலயத்தில் உள்ளது. நாராயண ரிஷி தவம் செய்த இடம். மகாலக்ஷ்மி புண்யாம்பிகை என்ற பெயரில் இங்குக் கோயில் கொண்டிருக்கிறாள். வடக்கு திக்கிற்கான ஜோதிர் மடத்தை இங்கு ஸ்தாபித்து தோடகர் என்ற தன் சிஷ்யரை அதன் தலைவராக்கினார். இவர் குரு பணிவிடையில் மிகவும் ஈடுபட்டவர். அந்த பாக்யத்தை இழக்க நேரிட்டதே என்று வருந்தினார். என்றாலும் குருவின் ஆக்ஞை மிக முக்கியம். குரு பணிவிடையால் தான் ஒருவனே நன்மை பெறலாம். மடத்தின் தலைவராக பணி செய்வதால் பலருக்கு நன்மை ஏற்படும் என்று தோடகர் இப்பொறுப்பை ஏற்றார்.

பைரவர் தரிசனம் :

ஆதிசங்கரர் இராமேஸ்வரம் வந்திருந்தபோது காபாலிக மதத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் மதப் பெருமையை எடுத்துக்கூறி ஆதிசங்கரர் தன் சிஷ்யர்களுடன் காபாலிக மதத்தில் சேர வேண்டும் என வற்புறுத்தினர்.

காபாலிகர்களுக்கும் சங்கரர் சிஷ்யர்களுக்குமிடையே தகராறு வலுக்கவே கபாலிகர்கள் தங்கள் இஷ்ட தெய்வமான பைரவரைப் பிரார்த்தித்து வரவழைத்தனர். பைரவரைக் கண்டு ஆதிசங்கரர் சிஷ்யர்கள் பயந்தனர்.

ஆதிசங்கரர் பைரவரைப் பார்த்து, "நீர் சிவனின் அம்சமல்லவா? துஷ்டர்களை சிக்ஷிக்கவே சிவனால் படைக்கப்பட்டவராயிற்றே. உம்மை உபாசிப்பதில் ஒருவிதக் குற்றமுமில்லை. ஆனால் பை—பயமுறுத்துபவர், ர—சந்தோஷப்படுத்துபவர், வ—வாந்தி எடுப்பவர் எனப் பொருள் கொண்டு, சிறரைப் பயமுறுத்தி அளவுக்கு மிஞ்சி குடித்து வாந்தி எடுக்கும் இக்காபாலிகர்களின் செயலே அருவருக்கத்தக்கது. வேதோக்தமான நற்கர்மங்களைச் செய்து இவர்கள் நற்கதி பெறலாகாதா?" என்று வேண்டினார்.

இதைக் கேட்ட பைரவர் "சங்கரரே நீங்கள் சாக்ஷாத் சிவனே; உம்மைக் காணவே வந்தேன். என் பெயரால் அதர்மம் புரியும் இவர்களை சிக்ஷித்து நல்வழியில் திருப்புவது உம் கடமை" என்று கூறி மறைந்தார்.

தங்கள் தெய்வமே தங்களை கைவிட்டு விட்டபின் அவர்கள் சங்கரர் வழியைப் பின்பற்றினர்.

காஞ்சியில் காமகோடி மடம் :

காஞ்சி நகரில் காமகோடி மடத்தை ஸ்தாபித்து அங்குள்ள சாக்தர்களை வென்று ஸ்ரீ காமாக்ஷி முன் ஸ்ரீசக்ரப் பிரதிஷ்டை செய்தார். அம்பிகையின் உக்ர கலைகளை அடக்கி சாந்த ஸ்வரூபியாகச் செய்தார்.

காமகோடி மடம் பற்றி பிரும்மாண்ட புராணத்தில்,

நேத்ர த்வயம் மஹேஸஸ்ய காசி
காஞ்சிபுரத்வயம்
விக்யாதம் வைஷ்ணவம் க்ஷேத்ரம்
சிவசாந்நித்யகாரகம்

என்று கூறப்பட்டிருக்கிறது. 'காமகோடி புரீம்காஞ்சீம்' என்கிறது பாகவதம்.

தேசத்திலுள்ள அநேக உத்தம தேவதா சந்நிதிகளிலும் உக்ர கலைகள் ஏற்பட்டிருந்தன. ஐம்புகேஸ்வரம் அகிலாண்டேஸ்வரிக்கு தாடங்கப் பிரதிஷ்டையும் திருவொற்றியூர் திரிபுர சுந்தரி அம்பிகை, மாங்காடு காமாக்ஷி அம்பிகை முன்பு யந்திர சாதனம் அமைத்து ஜகன் மாதாவின் அருளை சாமான்ய மனிதர்களும் அடையும்படி வழி செய்தார் சங்கரர்.

வைஷ்ணவத்தை நிலைநாட்டியவர் :

ஆதிசங்கரர் வைஷ்ணவத்தையும் நன்கு உணர்ந்து நிலை நாட்டியவர். குருவாயூரப்பனின் பக்தரான ஸ்ரீ நாராயண பட்டத்ரி தன் நாராயணீயத்தில்,

ஸ்ரீசங்கரோऽபி பகவான் ஸகலேஷு—
தாவத்
த்வாமேவ மாநயதி யோ நஹி பக்ஷபாதீ
த்வந்நிஷ்டமேவ ஸ ஹி நாமஸஹஸ்ர
காதி
வ்யாக்யத் பவஸ்துதிபர: ச கதிம்
கதோऽந்தே

(குருவாயூரப்பா! ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களான பரமாச்சார்யாள் எல்லா இடத்திலும் எப்போதும் விஷ்ணு மூர்த்தியான தங்களையே தான் கொண்டாடுகிறார். விஷ்ணு சகஸ்ரநாம ஸ்தோத்திரத்திற்கு பாஷ்யம் இயற்றிய சங்கரர் எல்லா நாமங்களையும் விஷ்ணு பரமாகவே வியாக்யானித்தாரே யொழிய சிவபரமாகச் செய்யவில்லை.)

ஆதிசங்கரர் ஆங்காங்கு பாஷ்யக் கிரந்தங்களிலும் நாராயணனையே பரம்பொருளாகக் கொண்டாடுகிறார்.

எல்லா சங்கர மடத்திலும் 'நாராயண ஸ்மிருதி' என்றுதான் கையொப்பமிதுப்படுகிறது. வேதம் ஓதும் போதும் "ஹரி:ஓம்" என்றே ஆரம்பிக்கப்படுகிறது.

ஆதிசங்கரரின தாயார் பரலோகத்தை அடையக்கூடிய சமயத்தில் ஏதாவது ஸ்துதி சொல்லும்படிச் சொல்ல சங்கரர் சிவனை ஸ்துதித்தார். சிவ கணங்கள் பயங்கரமான

ரூபத்துடன் தோன்றியதும் "இவர்களுடன் நான் கைலாசம் போகமாட்டேன். பரதேவதையான விஷ்ணுவை ஸ்துதி செய்" என்றார். அப்போது சங்கரர் விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்திரம் என்ற 51 ஸ்லோகங்கள் கூறினார். விஷ்ணு தூதர்கள் வந்து அவர்களுடன் ஆதிசங்கரரின் தாயார் வைகுந்தம் சென்றதாக சங்கர விஜயம் கூறுகிறது.

இந்த விஷ்ணு பாதந்தகேச ஸ்தோத்திரத்தை முடிக்கும் போது,

"தத்பாதாம்போருஹாப்யாம்
ஸததமபி நமஸ்குர்மஹே
நிர்மலாப்யாம்"

என்று, "என்னாலே சொல்லப்பட்ட இந்த ஸ்துதியால் யார் மகாவிஷ்ணுவின் அழகை அனுபவிக்கிறார்களோ அப்படிப்பட்ட விஷ்ணு பக்தர்களின் நிர்மலமான திருவடிகளை எப்போதுமே நான் நமஸ்காரம் செய்கிறேன்" என்கிறார் சங்கரர்.

ஜைனர்களையும் பௌத்தர்களையும் கண்டிக்கவே பிரஹ்மத்தை நிலைநாட்டினேனேயொழிய என் உள்ளம் "ஸோஹம்" என்பதைக் காட்டிலும் "தாஸோகம்" என்பதையே விரும்புகிறது என்கிறார் ஆசார்யாள்.

அலைகள்தான் சமுத்திரத்தினுடையவே தவிர சமுத்திரம் அலையைச் சேர்ந்ததாகாது.

**ஷண்மத ஸ்தாபனம் :**

ஹிந்து மதப் பிரிவுகளினால் ஏற்பட்ட வேற்றுமை காரணமாக வேதத்தின் அடிப்படை பிரமாணத்தை ஒப்புக்கொள்ளாத பௌத்த ஜைனர்களினால் மேலும் அதிகமான வேற்றுமைகள் நம் நாட்டில் உண்டாயின. நாளடைவில் இந்த ஜைன பௌத்த மதங்கள்கூடப் பல உட்பிரிவுகளை ஏற்படுத்திக் கொண்டன.

ஹிந்து மதம் நீடித்து நிலைக்க வேண்டுமானால் பல வேற்றுமைகள் இருப்பினும் அவற்றிலுள்ள ஒற்றுமைகளைக் கொண்டு தங்களுக்குள் சண்டை சச்சரவு இன்றி வாழவேண்டியது மிகவும் அவசியம். அப்படி இல்லாவிட்டால் ஹிந்து மதமே அழியக் கூடிய நிலையை அடைந்திருக்கும்.

இதற்காக ஆதிசங்கரர் இந்த வேற்றுமையில் ஒற்றுமை காண மிகவும் பாடுபட்டார். வேதத்தின் அடிப்படை பிரமாணத்தை முதலில் அவர் ஸ்தாபிக்க முயன்று வெற்றியும் கண்டார். வேதங்களின் பொருளை ஆராய்ந்த பெரியோர்களிடத்தில் கண்ட வேற்றுமைகளில் ஸ்ரீ பகவத்பாதர் ஒற்றுமையைக் கண்டு இதை மக்கள் பின்பற்ற வேண்டும் என்று பெரும் முயற்சி செய்தார்.

ஹிந்து மதத்தைப் பின்பற்றுபவர்களின் வழிபாட்டு முறைகளை ஆராய்ந்து அதில் ஆறு வழிகள் முக்கியமாக இருப்பதைக்கண்டு இந்த ஆறு வழிபாடுகளிலும் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி பெயர் கொண்ட தெய்வம் காணினும் எல்லாமாக முடிவில் ஒரே தெய்வம்தான் என்ற உண்மையை அவர் மக்களிடையே பரப்பலானார். பல வழிபாடுகளை ஆறு வழிபாடுகளாக்கி அமையும் ஒரே கடவுள் தத்துவத்தைத்தான் நோக்காகக் கொண்டுள்ளன என்ற பேருண்மையை ஆதிசங்கரர் கண்டதினாலும் அநேக மதங்களில் இருந்த அவைதிகமான ஆசாரங்களை நீக்கி நடைமுறையில் இந்த ஆறு மதங்களைக் கைக்கொள்ளச் செய்ததினாலும் இவருக்கு 'ஷண்மத ஸ்தாபனாசார்யர்' என்ற பெயர் ஏற்பட்டது. இதனால் இவர் இந்த ஆறுமதங்களை புதியதாக ஸ்தாபித்தார் என்று கொள்ளலாகாது. அவ்வாறு அவரோ அவரைப் பின்பற்றுபவர்களோ சொல்லவில்லை.

அவர் காலத்தில் 72 மதங்களாக பிரிந்து இருந்தவற்றை ஆராய்ந்து அவற்றில் பலவற்றைத் தள்ளியும் முடிவாக சைவம், வைஷ்ணவம், சாக்தம், கௌமாரம், காணாபத்யம், சௌரம் என்ற ஆறே முக்கியமானவை என்று தீர்மானித்து இவற்றைப் பரப்பலானார். தன் ஹரிமீடே ஸ்தோத்திரம் போன்றவற்றில் ஒரே ஸத்தான பொருளுக்குத்தான் சிவன், விஷ்ணு, சக்தி, கணபதி, குமரன், ஆதித்யன் என்றெல்லாம் பெயர் என்றும் தெளிவுபடுத்தியுள்ளார்.

ஒரே வஸ்து பல பேதங்களையும் பெயர்களையும் அடைய வேண்டும் என்றால் அது எப்படி முடியும் என்பதையும் ஆதிசங்கரர் விளக்குகிறார்.

ஒரே பிரும்மம் நிர்குணம் சகுணம் என்று இரண்டாக உள்ளதினால் உலக சம்பந்தம் வரையில் ஸகுணமாகும். தனி ஸ்வரூபத்தில் நிர்குணமாகும்.

ஒன்றை கண்டுபிடிப்பதற்காகவும் எல்லா வழிகளிலும் ஒன்றை பார்ப்பதற்காகவுமே வாழ்க்கையை ஆரம்பித்தவன் என்று ஆதிசங்கரர் தைத்ரீய உபநிஷத் பாஷ்யத்தில் தன்னைக் குறிப்பிட்டுக்கொள்கிறார்.

சைவ மதத்தை லிங்க சூடு இல்லாமலும், வைஷ்ணவ மதத்தை வாம சக்ரதாரண உபாஸனை இல்லாமலும், காபாலிக மதத்தை அஸ்தி, ஜடை தரிக்காமலும், தேவி மதத்தை மதுமாம்ஸமின்றியும், சூர்ய மதத்தை ரத்த அர்க்கியம் கொடாமலும் காணாபத்யத்தை உச்சிஷ்ட கணபதி நீங்கலாகவும் சீர்திருத்தம் செய்தார்.

கீதா பாஷ்யத்தில் பகவான் என்ற வார்த்தைக்கு பொருள் கூறும்போது ஆறு குணங்கள் உடைமையால் அப்பெயர் வந்தது என்று கூறி ஆறு குணங்களை சங்கரர் எடுத்துக்காட்டுகிறார். அவை ஞானம், ஐஸ்வர்யம், சக்தி, பலம், வீர்யம், தேஜஸ் என்பவை. இந்த ஆறும் ஆறு மூர்த்திகளிடம் விளங்கக் காணலாம்.

சிவன் — ஞானம்
விஷ்ணு — ஐசுவரியம்
அம்பிகை — சக்தி
கணபதி — பலம்
குமரன் — வீரியம்
சூர்யன் — தேஜஸ்

பதரீ கேதாரம் சென்று அங்கு ஒரு குகையில் தன் குரு கோவிந்தபாதரும், பரமகுரு கௌடபாதரும் நிஷ்டையிலிருப்பதைக் கண்டார். தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தைச் சொல்லவும் அவர்கள் கண் திறந்து சங்கரருடைய பாஷ்யங்களைக் கேட்டு அனுக்கிரகித்தார்கள். அங்கிருந்து சங்கரர் கைலாசம் சென்று சிவபெருமானைக் கண்டு அவரிடமிருந்து பஞ்சலிங்கங்களைப் பெற்றார்.

கொடுத்தவரும் வாங்கிக் கொண்டவரும் கொடுக்கப்பட்டப் பொருளும் ஒன்றுதான் என்ற ஆச்சரியமான நிகழ்ச்சி இது.

யோக லிங்கத்தை மட்டும் தன் ஆத்ம பூஜைக்கு வைத்துக் கொண்டு மோக்ஷ லிங்கத்தை சிதம்பரத்திலும், முக்தி லிங்கத்தை பதரிகாசிரமத்திலும், வர லிங்கத்தை நேபாளத்திலுள்ள நீலகண்ட க்ஷேத்திரத்திலும், யோக லிங்கத்தை சிருங்கேரியிலும் ஸ்தாபித்தார் சங்கரர்.

நேபாளத்திற்கும் ஆதிசங்கரருக்கும் தொடர்பு இருப்பதாக சான்றுகள் இருக்கின்றன. தன் விஜய யாத்திரையின் போது ஆதிசங்கரர் நேபாளத்திற்கு விஜயம் செய்து அங்கே பௌத்த மடத்தைத் தழுவியிருந்த அரசனையும் மற்றவர்களையும் மாற்றி பசுபதிநாதர் கோவிலின் பூஜா விதிகளையும் சரிவர அமைத்து தென் தேசத்திலிருந்து அர்ச்சகர்களை வரவழைக்க திட்டமிட்ட வரலாறு நேபாள தேசத்தின் வம்சாவளியிலிருந்து தெரிகிறது. ஸ்ரீ காமகோடி பீடத்தின் வரலாற்றைக் கூறும் புண்ணிய சுலோக மஞ்சரியில் நேபாளத்திற்கு ஆதிசங்கரர் விஜயம் செய்தது கூறப்பட்டுள்ளது.

மன்னாதி மன்னர்கள் எல்லோரும் சங்கரருக்கு சேவை செய்ய காத்திருந்தனர். காஞ்சியிலுள்ள ஸ்ரீ பராசக்தி பீடத்தில் அவர் ஆரோஹணம் செய்ய தீர்மானித்தார். சரஸ்வதி தேவியும் இந்திரனும் தன் பட்டங்களை அவருக்கு அளித்தார்கள். இதனாலேயே காமகோடி ஆசார்யர்களுக்கு இவ்விரு பட்டங்களும் உண்டு. பரதேவதையின் ஆக்ஞைப்படி ஆதிசங்கரர் சர்வக்ஞபீடாரோஹணம் செய்தார்.

தன் முப்பத்திரண்டாம் ஆண்டில் மனுஷ்ய சரீரத்தைவிட்டுபரமசிவனது திருமேனியில் ஸ்ரீ சங்கர பகவத்பாதர் ஐக்கியமானார்.

எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின்பும் அவர் போதித்த அத்வைதம் மங்காத பொலிவுடன் நிற்கிறது. சென்ற 100 வருஷங்களுக்குள் மேனாட்டு அறிஞர்களின் சிந்தையைக் கவர்ந்து அவர்களுடைய ஆழ்ந்த ஆராய்ச்சிக்கும் சர்ச்சைக்கும் ஈடு கொடுத்து வருகிறது.

ஆதிசங்கரர் வாழ்க்கையிலிருந்து தெரிவது வயது முதிர்ந்த காலத்தில் சத் காரியங்களைச் செய்வதைவிட சிறு வயதிலேயே செய்ய ஆரம்பிக்க வேண்டும்.

"கௌமாரே ஆச்ரேத் ப்ராக்ஞ:— தர்மான்
பாகவதான் இஹ"
—ஸ்ரீமத் பாகவதம்.

அதாவது குமார பருவத்திலேயே பகவத் தர்மங்களை அனுஷ்டிக்க வேண்டும்.

ஆதிசங்கரர் சரிதத்தை சொல்லக் கூடிய கிரந்தங்களாவன: மாதவீய சங்கரவிஜயம், கேரளீய சங்கரவிஜயம், சங்கரவிஜயவிலாசம், சங்கராப்யுதயம், ஆனந்த கிரீய சங்கரவிஜயம், குரு ரத்ன மாலிகை, வியாஸாசலீய சங்கரவிஜயம், பதஞ்சலிசரிதம், பிரும்மாண்ட புராணந்தர்கதமான மார்க்கண்டேயர் சம்ஹிதை, சிவரகஸ்யம்.

காஷ்மீரில் சங்கராச்சாரியார் மலை என்றே ஒரு குன்றில் ஆதிசங்கரர் ஆலயமுள்ளது. காஞ்சி காமாக்ஷி ஆலயத்தில் அவருக்குத் தனிச் சந்நிதியுள்ளது.

(நன்றி: ஹரிஹர அம்ச ஆசார்யர்கள்-நஜன்.)

## சந்தாதாரர்களுக்கு

30-6-91 ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும் போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும், புகார்களுக்கும், விவரங்களுக்கும் 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

138, 200, 203, 240, 253, 331, 343, 530, 698, 702, 705, 706, 711, 1524, 1642, 1644, 1653, 1690, 2788, 2962, 3131, 4366, 4371, 4372, 4379, 4388, 4390, 5020, 5401, 5682, 5697, 5701, 7459 to 7465, 7467 to 7469, 7471 to 7477, 7479, 7481 to 7499, 7501 to 7507, 7509, 7510, 7520, 7521, 7527, 7528 to 7532, 7534, 7535, 7548, 7549 to 7554, 7556, 7558, 7559 to 7564.



ஓம் ஸ்ரீ மாத்ரே நம :

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்.

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மாமேருபஞ்ச லோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) 5×5 செ. மீ. 500-00 $6\frac{1}{2}\times6\frac{1}{2}$ செ. மீ. | ரூ. 750/- |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யந்திரங்கள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தைஉண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீசாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ மகாசுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) மேற்கண்ட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | சர்வ சித்தி யந்த்ரம் விமானம் முதல் கார்கள் வரை ஏற்படும் விபத்துக்களைத் தடுத்துக் காக்க வல்லது | 500-00 |
| 10. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 11. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 13. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனாகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 14. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 15. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்த திருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 16. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 17. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகள நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 80-00 |
| 18. | த்த்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண் திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கிக் காப்பாற்ற வல்லது | 150-00 |
| 19. | பூஜைக்கு உரிய பஞ்சாயதன செட்டும், பாணலிங்கம், ஸ்படிக லிங்ககம் பலவிதமான மாலைகள் சுத்த வெள்ளியால் செய்யப்பட்டவையும் இன்னும் பலவிதமான சாதனங்களும் கிடைக்கும் பூஜைக்குரிய பாதுகை இங்குக் கிடைக்கும். | |
| 20. | துளசி மணி மாலை ரூ. 150/- ருத்ராட்ச மாலை ரூ. 350/- ஸ்படிக மணி மாலை ரூ. 300/- தாமரைமணி மாலை ரூ. 200/- (ஒவ்வொரு மாலையும் 54 மணிகள் கொண்டு சுத்த வெள்ளியில் வெள்ளி கவசத்துடன் கட்டியது. | |

விபரங்களுக்குத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :


**ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்**

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,
153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்),
கோபாலபுரம், சென்னை - 600086.

**ஸ்வாமிஜி முருக பூஷணம்**

ஸ்ரீ வித்யா உபாசகர் - டிரஸ்டு,
ஸ்ரீ மாமேரு டிரஸ்ட் நெ. 72 கௌடியா மடம் ரோடு,
சென்னை - 600014 போன் : 861254,

**போன் : கடை : 472013 மா மேரு டிரஸ்டு வீடு: 861254**


" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "

# நாராயணவரம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள்

திருமதி. கே. தேவகிபிரகாசம்-திருப்பதி.

வைணவத்தலங்களுள் சிறப்பு வாய்ந்தது திருமலை. இத்தி ருத்தலத்தில் குடிகொண்டிருக் கும் திருவேங்கடவன் நின்ற கோலத்தினனாய் தன்னை நாடி வரும் கோடானுகோடி பக்தர் களுக்கு அருள் புரிந்து வரு கின்ருர். இவர் பத்மா வதி அம்மையாரை மணந்து கொண்ட திருத்தலம் நாராய ணவரம் என்ற புண்ணியத்தல மாகும். இங்கே இவர் அருள் மிகு கல்யாணவெங்கடேசுவரசு வாமி என்ற பெயரால் அழைக் கப்படுகின்ருர். இவர் கோயில் கொண்டிருக்கும் இத்திருத்தலத் தில் நடைபெறும் விழாக்களைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

விழா என்ற சொல் எப் படி உருவானது என்பதை மு. அருணசலம் என்னும் அறிஞர் " "பெஸ்டிவல்"என்ற சொல்லுக்குத் தமிழில் விழா, விழவு என்ற பொருள்கள் விளங் குகின்றன. இது விழை என்ற வேர்ச் சொல்லில் இருந்து பிறந்ததாகும். அதா வது அவா, காதல் என்ற பொருளில் வரும். பெயர்ச் சொல்லாய் வரும்போது ஒன்று விருப்பப்பட்டுக் கொண்டாடப்ப டுதல் என்ற பொருளைத்தரும். குறுகிய அன்பு விரிவடையும் போது அது விழாக்களின் வடி வத்திலும் கொண்டாட்டத்தின் வடிவத்திலும் வெளிப்படுத்தப்ப டுகின்றது. சமஸ்கிருதத்தில் ஒன்றை மேலே உயர்த்து என்ற வேர்ச்சொல்லைத் தரும் உத்சவம் என்ற சொல் வழங் கப்படுகிறது. ஆங்கில மொழி யில் "பீஸ்டு" சமயத்தொடர் பான மகிழ்ச்சி தரும் ஆண்டு விழாக்கள், கொண்டாட்டங்கள் ஆகிய இரு சொற்களும் முற்கூ றிய பொருளையே தருகின்றன. இவை அனைத்தும் கொண் டாட்டம் என்னும் பொதுநிகழ்ச் சியயையே குறிப்பன" என்கிருர்.

விழா என்ற சொல்லுக்கு அறிஞர் பலர் பலவாருன பொருள்களைத் தருகின்றனர்.

"விழா என்ருல் ஒரு குறிப்பிட்ட நாளிலோ, அல் லது காலத்திலோ சில சிறப் பான நிகழ்ச்சிகளின் நினை வாக மகிழ்ந்து இருப்பதோ, உண்டு களித்திருப்பதோ ஆகும். "மேலும் மக்கள் அனைவரின் மகிழ்ச்சிக்கு ஊற்ருகத் திகழ் வன என்றும், "ஆதி மக்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் கூட் டுச்சடங்குகளிலிருந்து தோன்றி யது" என்றும் "ஒரு மதத் தைச் சேர்ந்த எல்லாச் சமூ கத்தினரும், பத்துப் பன்னி ரண்டு நாட்கள் கொண்டா டும் நிகழ்ச்சி" என்றும், "மக் கள் வாழ்வை வளப்படுத்துவது என்பதுதானே பொருள். செல் வரும் வறியவரும் வேறுபாடு இல்லாத ஒன்றை நினைவூட் டுவதும், பெற்றது கொண்டு சுற்றமுடன் வாழும் பண்பாடே விழாவின் அடிப்படை' என்றும் பொருள் கொள்ளப்படுகிறது.

"திருவிழா மக்களிடையே நல்லுறவை வளர்ப்பது, விருந் தோம்பல் என்ற பண்புக்கு உரம் ஊட்டுவது" என்றும் அறி ஞர்கள் விழா என்பதற்குப் பல் வகையான பொருள்களைக் கூறு வர்.

விழாக்கள் பலவகையாகும். அவை 1. குடும்ப விழா, 2. சமுதாய விழா, 3. சமய விழா, 4. அரசியல் விழா ஆகியவை.

தென்னிந்தியா கோயில்க ளுக்குப் பெயர்பெற்ற இடமா கும். வடகோடியில் உள்ள திருப்பதி, முதல் கோயிலாக அமைந்துள்ளது. இதற் குத் தொடர்புள்ள கோயில் களுள் நாராயணவரம் அருள் மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் சிறப்புப் பெறுகிறது.

இக்கோயில் சித்தூர் மாவட் டத்தில் நாராயணவரம் மண் டலத்தில் திருப்பதியிலிருந்து. சென்னைக்குச் செல்லும் வழி யில் அமைந்துள்ளது. இக்கோ யில் ஊரின் மையப் பகுதியில் அமைந்துள்ளது. இக்கோயி லுக்குக் கிழக்கே அருணநதி ஓடு கிறது. இவ்வூர் நான்கு திசைக ளிலும் மலைகளால் சூழப்பட்டு உள்ளது. இங்கு வேளாண் மைக்கு ஏற்ற சூழல் அமைந் துள்ளது.

இவ்வூரில் இக்கோயிலோடு வேறு பல கோயில்களும் உள் ளன. அருணைநதிக் கரையோ ரத்தில் சித்தர் வழி வந்தவர் களில் ஒருவரான சுரைக்காய் சுவாமி என்பவர் 100 ஆண்டு களுக்கு முன் பல ஆண்டுகள் இவ்வூரில் வாழ்ந்து கடை சியில் சமாதி ஆனார். அவ ருக்குக் கோயில் கட்டி சிலை எழுப்பி வழிபட்டு வருகின் றனர். மேலும் இக்கோ யிலைச் சுற்றி அமைந்துள்ள மீனாட்சியம்மன் கோயில், பரா சிரீஸ்வரர் கோயில், அகஸ்தீஸ் வரர் கோயில், வீரபத்திரசு வாமி கோயில், சக்தி விநா யகர் கோயில் போன்றவையா வும் கல்யாண வெங்கடேசுவர சுவாமி கோயில் கட்டிய காலத் திலேயே கார்வேட்டி நகர அரசர்களால் கட்டப்பட்டவை.

இவ்வூருக்குக் கிழக்கில் 5 கல் தொலைவில் சிறப்புப் பெற்ற அருவி ஒன்று உள் ளது இந்த அருவி யில் தமிழகத் தலைநகரத்திலி ருந்தும் மற்ற ஊர்களில் இருந் தும், சித்தூர் மாவட்டத்தின் பல்வேறு ஊர்களில் இருந்தும் வந்து மக்கள் நீராடி இன்புறு கின்றனர்.

இத்தகையச் சூழலில் அமைந் திருக்கும் கல்யாணவெங்கடே சுவரருக்குத் திருவாழாக்கள் பல இடைவிடாமல் நிகழ்த் தப்பெற்று வருகின்றன. திரு விழா திங்கள் தோறும் நடை பெறும் விழாக்கள் என்றும், நாள், வாரம், பருவம், ஆண்டு போன்ற காலங்களில் நடைபெ றும் விழாக்கள் என்றும் பிரம் மோத்சவங்கள் என்றும் பிரிக் கப்பட்டுள்ளன.

சித்திரைத் திங்கள்:

திங்கள் தோறும் இங்கு நட் சத்திர நாளில் நடைபெறும் விழாக்களில் சித்திரைத் திங் களில் ஸ்ரீராமானுஜருக்கு நடை பெறும் விழா குறிப்பிடத்தக் கது.

வைகாசித் திங்கள்:

இத்திங்களில் இறைவனுக்கு 10 நாட்கள் பிரம்மோத்சவம் மிகச்சிறப்பாக நடைபெறுகிறது. இவ்விழாக்காலங்களில் நாள் தோறும் உற்சவ மூர்த்தி பல் வேறு ஊர்திகளில் திருவீதி வுலா வருவர். காலை வேளையில் நாள்தோறும் கோயி லைச் சுற்றி வலம் வரு வர். இக்காலங்களில் திவ் யப்பிரபந்தம் பாடப்பெறுகிறது. திருமறைகளும் ஓதப்படுகின் றன. இக்கோயில்களில் நிகழ்த் தப் பெறுகின்ற திருவிழாக்களி லேயே இத்திருவிழாதான் மிகச் சிறப்பானது. வண்ண விளக்கு களும் வாண வேடிக்கையும் வில் லுப்பாட்டு என்று சொல்லப்ப டும் ஹரிகதைகளும், மேளக்கச சேரியும் இவ்விழாவைச் சிறப் பிக்கின்றன.

ஆனித் திங்கள்:

இந்நாளில் ஆனிவாராஸ் தான உற்சவம் என்ற உற்சவம் நடைபெறும். அன்று இறைவன் கையில் விலங்கு போடப்பட்டு குபேரன் கடனுக்காகப் பணம் வசூல் செய்யப்படுகிறது.

ஆடித் திங்கள்:

இந்நாளில் பத்மாவதி அம் மையாருக்கு வரலட்சுமி நோன்பு என்ற திருவிழா நடைபெறுகி றது.

ஆவணித்திங்கள்:

இந்நாளில் கண்ணன் பிறப்பு சிறப்பாக நடைபெறுவதோடு உறியடித்திருவிழா, பால்குடத் திருவிழா ஆகிய விழாக்களும் சிறப்பாக நடைபெறுகின்றன.

புரட்டாசித் திங்கள்:

இத்திங்களில் ஸ்ரீ வேதாந் ததேசிகருக்கு 10 நாட்கள் மிகச் சிறப்பாக அவர் பிறந்த திரு வோண நட்சத்திரத்தில் திரு விழா நடைபெறுகிறது. இத் திங்களில் பத்மாவதி அம்மையா ருக்கு நவராத்திரி கொலு என்ற உற்சவம் நடைபெறுகிறது.

ஐப்பசித் திங்கள்:

இம்மாதத்தில் முதலாழ்வார் கள் என்று சொல்லப்படும் பொய்கையாழ்வார், பேயாழ் வார், பூதத்தாழ்வார் முத லானோர் பிறந்தநாள் விழா வும் மணவாள மாமுனிகள் பிறந்த நாள் வாழாவும் நிகழ்த் தப் பெறுகின்றன. தீபா வளித் திருவிழாவின் போது இறைவனைப் புத்தாடையுடன் பல வகை அணிகளால் அழகு செய்து பக்தர்களின் வழிபாட் டிற்காக ஓரிடத்தில் நிறுத்தி வைப்பர்.

கார்த்திகைத் திங்கள்:

இம்மாதத்தில் ஊருக்கு அரு கில் உள்ள குளத்தில் தெப்பத் திருவிழா ஐந்து நாட்கள் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.

மார்கழித் திங்கள்:

இந்நாளில் ஆண்டாள் அரு ளிச் செய்த திருப்பாவை பாடப் பெற்று 30 நாட்கள் தனுர்மாத பூசை என்னும் விழா நடைபெ றுகிறது. இத்திங்களில் நடை பெறும் வைகுண்ட ஏகாதசியும், வைகுண்ட துவாதசியும் மிகப் புனிதமான திருநாட்களாகும்.

தைத் திங்கள்:

இம்மாதத்தில் மகர சங்க ராந்திக் திருவிழாவும், ரதசப் தமி திருவிழாவும் நடைபெறு கின்றன. அது போது இறை வன் ஏழு ஊர்திகளில் எழுந் தருளி திவ்வியப் பிரபந்தப் பாடல்கள் இசைத்து வர திரு வீதிவுலா வருவர்.

பங்குனித் திங்கள்:

இந்நாளில் அருள்மிகு பத்மா வதிஅம்மையாருக்கு 10 நாட்கள் திருவிழா நடைபெறும். பத்தா வது நாளன்று பங்குனி உத் திரத்திருவிழா மிகச்சிறப்பாக நடைபெறுகிறது. இறைவன் சப்பர மஞ்சத்தில் சப்பரக் கட்டி லில் தேவியர் அனைவருடனும் பள்ளிகொண்ட திருக்கோலத் தில் காட்சி தருவர்.

இக்கோயிலில் நாள்தோறும் காலை 6 மணி முதல் நண்பகல் 12-00 மணிவரையிலும், மாலை 4-00 மணி முதல் இரவு 9 மணி வரை வழிபாடுகள் நிகழ்த்தப் பெறுகின்றன.



(3-ம் பக்கத் தொடர்ச்சி)

இன்னும் விரைவாக நகர வில்லையே என்று சலித்துக்கொள்ளும் அம்மனமே, மூலஸ்தானத்தில், இன்னும் ஓரிரு வினாடிகள் இறைவன் முன் நிற்க அனுமதிக்கவில்லையே என்று ஆதங்கப்படுகிறது. வெளிவரும் போது ஒரு கைப்பிடிக்குள்ளேயே அடங்கும் பிரஸாதமும், "என்றோ நாம் சாப்பிட்டோம் வடையை" என்று மனம் அசைபோட, பங்கீடு முறையில் லட்டு பிரஸாதமும் கிடைத்திடும் சூழ்நிலை இன்று ஒவ்வொரு சாதாரண பக்தரும் எதிர்கொள்ளும் அன்றாட கோயில் அனுபவமாகும்.

திருமலைக்கு வரும் யாத்திரிகப் பொதுமக்களின் கூட்டம் நாளுக்குநாள் பெருகி வந்தாலும், அதற்கேற்றவாறு அவர்களுடைய உணவு மற்றும் தங்கு வசதிகளை மனதிற் கொண்டு, தி.தி. தேவஸ்தான மேலாண்மை அவ்வப்போது புதிய திட்டங்களையும், அணுகு முறைகளையும் மேற்கொண்டு வருகிறது என்பதற்குச் சாட்சியாக, கடந்த பத்தாண்டுகளாக திருமலையில் பெருகி வரும் விருந்தினர் விடுதிகளும், குடில்களும், 'க்யூ' கட்டிடமும், இலவச உணவு மற்றும் தலைமுடி மழிப்புக் கட்டிட வளாகங்களும், திருமலையில் இலவச பேருந்து வசதி போன்றனவும் விளங்குகின்றன

ஆனால், திருமலைக் கோயிலில் எளிய, விரைவான மூலவரின் தரிசனத்தை பக்தருக்கு அமைத்துத் தருவது என்பதே மேலாண்மைக்கு ஒரு பெரும், தீர்க்கமுடியாத பிரச்சனையாக திகழ்ந்து வருகின்றது. கோயிலாகமங்கள் மற்றும் வைணவ ஸம்ப்ரதாயங்களுக்கு மாறாக அமையாது இதற்காக பல திட்டங்களைக் கடந்த பல ஆண்டுகளாக தேவஸ்தானம் ஆலோசித்து வருவது நாடறிந்த செய்தியாகும்.

இத்திட்டங்களில் ஒன்றாக விரைவான தரிசன வசதியினைப் பெற்றுத்தரும் வகையில், தானாக பக்தர்களை மூலஸ்தானத்திற்குள் அழைத்துச் சென்று, வெளிக்கொணரும் வகையில் மின்சாரத்தால் இயங்கும்படியான "கன்வேயர் பெல்ட்" எனும் 'இழுவைப்பட்டை' முறையினைப் பயன்படுத்த மேலாண்மை அண்மைக் காலமாக தீவிரமாக சிந்தித்து வருகின்றது. எனினும் சம்ப்ரதாயங்களுக்குக் கட்டுப்பட்டும் விஞ்ஞான வசதிகளை அனுபவித்துக்கொண்டும், பழமைக்கும் புதுமைக்கும் இடையில் அகப்பட்டுத் தவித்துக்கொண்டிருக்கும் மக்களின் ஏகோபித்த முடிவினைப் பொறுத்தே இத்திட்டத்தினைச் செயல்படுத்துவது என்று மேலாண்மை தீர்மானித்துள்ளது. "மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு" எனும் மூத்தோர் உரைக்கு பெருமதிப்பு அளித்திடவே, தனது பிரச்சனைக்கு விடைகாண, பொதுமக்களின் ஒரு அங்கமான 'ஸப்தகிரி' வாசகர்களையும் மேலாண்மை நாடியுள்ளது. உங்கள் கருத்தும் மேலாண்மைக்கு ஒரு வழிகாட்டியாக அமையும் என்றே நம்புகிறோம்.

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

பாக நடைபெற்றன. தமிழ்நாடு, ஆந்திரம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களைச் சார்ந்த சுமார் 120 பஜனைக் குழுவினர் இப்படிவிழா நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர். 15-4-91 அன்று பஜனைக் குழுவினர், தி. தி. தே. உயர் அலுவலர்கள் பங்கேற்க திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயார் கோயிலுக்குச் சென்று சிறப்பு வழிபாடு மேற்கொண்டு, திருப்பதியில் முக்கிய நகரங்களில் குழுக்களின் பக்தி ஊர்வலம் மேற்கொள்ளப்பட்டது. அன்று மதியம் ஸ்ரீ அன்னமாசார்யா கலா மந்திரத்தில் கூடி, பஜனை மற்றும் பல சமய நிகழ்ச்சிகளை நடத்தினர். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை ஆ. செ. நரசிம்மன் அவர்கள் வரவேற்க திரு. வி. ஏ. புண்ணிய கோடி அவர்கள் கூட்டத்தினர்க்கும், தேவஸ்தான மேலாண்மைக்கும் நன்றி நவின்றார்.

அடுத்த நாளான 16-4-91 அன்று திருமலை அடிவாரமான அலிபிரியில் நாதஸ்வர இசை முழங்க, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம். வி. எஸ். பிரஸாத் உள்ளிட்டுப் பல உயர் அலுவலர்கள், ஓம் முருகாஸ்ரம சுவாமிகள் டி. எஸ். அனந்தநாராயண அடிகளார் உடன் வர, படி முழுவதும் மஞ்சள், குங்குமப் பொட்டு வைக்கப்பட்டு, 120 பஜனைக் குழுவினரும், சுமார் 5000 பக்தர்களும் புடைசூழ திருமலை ஏறினர். அன்று மாலை திருமலை ஆஸ்தான மண்டபத்தில் பஜனை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இப்படிவிழாவில் பங்கேற்ற பக்தர்களுக்கு இலவச உணவும், தங்குமிடமும் தேவஸ்தான மேலாண்மை அமைத்துக் கொடுத்தது.

தகவல்:

ஆ. செ. நரசிம்மன்,
படிவிழா சங்கப் பொதுச் செயலர்.

# நமோ நமோ லக்ஷ்மீ நரஸிம்ஹா - அன்னமய்ய பாட்டு

**பண்: பூர்ண சந்திரிகா**
**தாளம்: ஆதி**
**பண்ணமைப்பு: திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத்.**

ப:- ரீ ரீ ; கமரீ ; ; கம । பா ; ஸ்நிபா । பாஸாஸா ; ॥
நமோ நமோ லக்ஷ்மீ ந · ர । ஸிம் ஹா ॥
ரீ ரீ ; க்ம்ரீ ; ; பா । ரீ ; ஸ்நி பம । கம ரிகமரிஸநி ॥
நமோ நமோ ஸுக்।ரீ வ · ந · । ர · ஸிம் ஹா ॥

2ச:- ; பபா பபா மாபம ரீ ரீ । ; கமா ரிரீ । ஸரீ ஸா , ஸா ॥
; பய ஹர ப்ரஹ்லாத । பா லன । நர ஸிம் ஹ ॥
; ஸநீபா ரி ரீ ; ரி கமரீ । ; கமா பாரி । ஸ்நிபா ; ; ॥
நயனத்ர யார விந்த । நர ஸிம் । ஹா ॥
; ஸ்நீபரீ ரீரீரீரீ । ; ஸ்நீபரீ । ரிரீ ரீ , ரீ ॥
ஜயஜய ஸுரமுனி । ஸம்ஸ்துத । நரஸிம்ஹ ॥
க்ா க்ம்ப்ம்ரீ ஸா ; நீபா । ரீ ; ஸ்நி பம । கம ரிகமரிஸநி ॥
க்ரியா கஸாபஸு।க்ரீவ ந । ர ஸிம் ஹா ॥

3ச:- பபாம பா , நி பமரீரீ ரீ । கமா ரீ , ரீ । ஸரீ ஸா , ஸா ॥
அதிக்ரு பா · நி · லயமோ । ஹனரூப । நர ஸிம் ஹ ॥
ஸநீபரீ ; ரிரீ காமரீ । ; கமா பாரீ । ஸ்நிபா ; ; ॥
நதபிதா மஹமுக்ய । நர ஸிம் । ஹா ॥
; ஸ்நீபரீ ரீ ; ரீரீ ரீ । ஸ்நீபா ரீ । ரிரீ ரீ , ரீ ॥
ஸததஸ்ரீ வேங்கடேஸ் । வரதிவ்ய । நர ஸிம்ஹ ॥
க்ம்ா ரீ , ரீ ஸ்ரீ ஸ்நீ பா । ரீ ; ஸ்நிபம । கம ரிகமரிஸநி ॥
கிதவாரி பங்ஜன ஸு।க்ரீவ · ந · । ர · ஸிம் ஹா ॥

*(முதல் சரணத்தினை இரண்டாம் சரணம் போன்று பாட வேண்டும்)*

**Edited Published on behalf of T. T. Devastanams by K. Subba Rao, M. A. and Printed at T. T. D. Press**
**By M. Vijayakumar Reddy, Manager, T. T. D. Press, Tirupati-517507.**

